## தேசிய கீதம்

ஸ்ரீ லங்கா தாயே - நம் ஸ்ரீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நல்லெழில் பொலி சீரணி
நலங்கள் யாவும் நிறை வான்மணி லங்கா
ஞாலம் புகழ் வள வயல் நதி மலை மலர்
நறுஞ்சோலை கொள் லங்கா
நமதுறு புகலிடம் என ஒளிர்வாய்
நமதுதி ஏல் தாயே
நம தலை நினதடி மேல் வைத்தோமே
நமதுயிரே தாயே - நம் ஸ்ரீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதாரருள் ஆனாய்
நவை தவிர் உணர்வானாய்
நமதேர் வலியானாய்
நவில் சுதந்திரம் ஆனாய்
நமதிளமையை நாட்டே
நகு மடி தனையோட்டே
அமைவுறும் அறிவுடனே
அடல் செறி துணிவருளே - நம் ஸ்ரீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதார் ஒளி வளமே
நறிய மலர் என நிலவும் தாயே
யாமெலாம் ஒரு கருணை அனைபயந்த
எழில்கொள் சேய்கள் எனவே
இயலுறு பிளவுகள் தமை அறவே
இழிவென நீக்கிடுவோம்
ஈழ சிரோமணி வாழ்வுறு பூமணி
நமோ நமோ தாயே - நம் ஸ்ரீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

ஒரு தாய் மக்கள் நாமாவோம்
ஒன்றே நாம் வாழும் இல்லம்
நன்றே உடலில் ஓடும்
ஒன்றே நம் குருதி நிறம்

அதனால் சகோதரர் நாமாவோம்
ஒன்றாய் வாழும் வளரும் நாம்
நன்றாய் இவ் இல்லினிலே
நலமே வாழ்தல் வேண்டுமன்றோ

யாவரும் அன்பு கருணையுடன்
ஒற்றுமை சிறக்க வாழ்ந்திடுதல்
பொன்னும் மணியும் முத்துமல்ல - அதுவே
யான்று மழியாச் செல்வமன்றோ.

ஆனந்த சமரக்கோன்
கவிதையின் பெயர்ப்பு.



''புதிதாகி, மாற்றமடைந்து சரியான அறிவின் மூலம்
நாட்டுக்குப் போன்றே முழு உலகிற்கும் அறிவுச் சுடராகுங்கள்''

## கௌரவ கல்வி அமைச்சரின் செய்தி

கடந்து சென்ற இரு தசாப்தங்களுக்கு அண்மிய காலமானது உலக வரலாற்றில் விசேட தொழினுட்ப மாற்றங்கள் நிகழ்ந்ததொரு காலமாகும். தகவல் தொழினுட்பம் மற்றும் ஊடகங்களை முன்னணியாகக் கொண்ட பல்வேறு துறைகளில் ஏற்பட்ட துரித வளர்ச்சியுடன் இணைந்து மாணவர் மத்தியில் பல்வேறு சவால்கள் தோன்றியுள்ளன. இன்று சமூகத்தில் காணப்படும் தொழில்வாய்ப்பின் இயல்பானது மிக விரைவில் சிறப்பான மாற்றங்களுக்கு உட்படலாம். இத்தகைய சூழலில் புதிய தொழினுட்ப அறிவையும் திறனையும் அடிப்படையாகக் கொண்டதொரு சமூகத்தில் வெவ்வேறு விதமான இலட்சக்கணக்கான தொழில்வாய்ப்புகள் உருவாகின்றன. எதிர்கால சவால்களை வெற்றிகொள்ளும் பொருட்டு நீங்கள் பலம்பெற வேண்டுமென்பது கல்வி அமைச்சரென்ற வகையில் எனதும் எமது அரசினதும் பிரதான நோக்கமாகும்.

இலவசக் கல்வியின் சிறப்புமிக்கதொரு பிரதிபலனாக உங்களுக்கு இலவசமாகக் கிடைத்துள்ள இந்நூலை சீராகப் பயன்படுத்துவதும் அதன்மூலம் தேவையான அறிவைப் பெற்றுக்கொள்வதுமே உங்கள் ஒரே குறிக்கோளாக இருக்க வேண்டும். அத்துடன் உங்கள் பெற்றோர்களுட்பட மூத்தோரின் சிரமத்தினதும் தியாகத்தினதும் பிரதிபலனாகவே இலவசப் பாடநூல்களை அரசினால் உங்களுக்குப் பெற்றுத்தர முடிகிறது என்பதையும் நீங்கள் விளங்கிக்கொள்ள வேண்டும்.

ஓர் அரசாக நாம், மிக வேகமாக மாறி வரும் உலக மாற்றத்திற்குப் பொருந்தும் விதத்தில் புதிய பாடத்திட்டத்தை அமைப்பதும் கல்வித் துறையில் தீர்க்கமான மாற்றங்களை மேற்கொள்வதும் ஒரு நாட்டின் எதிர்காலம் கல்வி மூலமே சிறப்படையும் என்பதை மிக நன்றாகப் புரிந்து வைத்துள்ளதனாலேயேயாகும். இலவசக் கல்வியின் உச்சப் பயனை அனுபவித்து நாட்டிற்கு மாத்திரமன்றி உலகுக்கே செயற்றிறன்மிக்க ஓர் இலங்கைப் பிரசையாக நீங்களும் வளர்ந்து நிற்பதற்கு தீர்மானிக்க வேண்டியுள்ளது. இதற்காக இந்நூலைப் பயன்படுத்தி நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு உங்களுக்கு உதவுமென்பது எனது நம்பிக்கையாகும்.

அரசு உங்கள் கல்வியின் நிமித்தம் செலவிடுகின்ற மிகக் கூடிய நிதித்தொகைக்கு பெறுமதியொன்றைச் சேர்ப்பது உங்கள் கடமையாவதுடன் பாடசாலைக் கல்வியூடாக நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு மற்றும் திறன்கள் போன்றவையே உங்கள் எதிர்காலத்தைத் தீர்மானிக்கின்றன என்பதையும் நீங்கள் நன்கு கவனத்திற்கொள்ள வேண்டும். நீங்கள் சமூகத்தில் எந்த நிலையிலிருந்தபோதும் சகல தடைகளையும் தாண்டி சமூகத்தில் மிக உயர்ந்ததொரு இடத்திற்குப் பயணிக்கும் ஆற்றல் கல்வி மூலமாகவே உங்களுக்குக் கிடைக்கின்றது என்பதை நீங்கள் நன்கு விளங்கிக்கொள்ள வேண்டும்.

எனவே இலவசக் கல்வியின் சிறந்த பிரதிபலனைப் பெற்று, மதிப்பு மிக்கதொரு பிரசையாக நாளைய உலகை நீங்கள் வெற்றி கொள்வதற்கும் இந்நாட்டில் மட்டுமன்றி வெளிநாடுகளிலும் இலங்கையின் நாமத்தை இலங்கச் செய்வதற்கும் உங்களால் இயலுமாகட்டும் என கல்வி அமைச்சர் என்ற வகையில் நான் பிரார்த்திக்கின்றேன்.

**அகில விராஜ் காரியவசம்**
**கல்வி அமைச்சர்**

## முன்னுரை

உலகின் சமூக, பொருளாதார, தொழினுட்ப, கலாசார விருத்தியுடன் சேர்ந்து கல்வியின் நோக்கங்கள் மிக விரிந்த தோற்றமொன்றைப் பெற்றுள்ளன. மானிட அனுபவங்கள், தொழினுட்ப மாற்றங்கள் ஆராய்ச்சி மற்றும் புதிய குறிகாட்டிகளின்படி கற்றல் கற்பித்தல் செயற்பாடும் நவீனமயமாக்கப்பட்டுள்ளது. அதன்போது மாணவர் தேவைக்குப் பொருந்தும் விதமான கற்றல் அனுபவத்தை ஒழுங்கமைத்து கற்பித்தல் செயற்பாட்டை நடைமுறைப்படுத்திச் செல்வதற்கு பாடத்திட்டத்தில் காணப்படுகின்ற நோக்கங்களிற்கிணங்க பாடம் தொடர்பான விடயங்களை உள்ளடக்கிப் பாடநூல்களை ஆக்குவது அவசியமாகும். பாடநூல் என்பது மாணவரின் கற்றல் சாதனம் மாத்திரமல்ல. அது கற்றல் அனுபவங்களைப் பெறுவதற்கும் அறிவு, பண்பு விருத்திக்கும் நடத்தை மற்றும் மனப்பாங்கு வளர்ச்சியுடன் உயர்ந்த கல்வியொன்றை பெற்றுக் கொள்வதற்கும் மிகவும் உதவக்கூடியதுமாகும்.

இலவசக் கல்விக் கருத்திட்டத்தை நடைமுறைப்படுத்தும் நோக்கில் தரம் 6 முதல் தரம் 11 வரை சுமார் 91 வகையான பாடநூல்கள் அரசினால் உங்களுக்கு வழங்கப்படுகின்றன. அந்நூல்களிலிருந்து உயர்ந்தபட்சப் பயன்களைப் பெற்றுக்கொள்வதுடன், அவற்றைப் பாதுகாப்பதும் உங்களது கடமையாகும் என்பதையும் நினைவூட்டுகின்றேன். பூரண ஆளுமைகொண்ட நாட்டிற்குப் பயனுள்ள சிறந்ததொரு பிரசையாகுவதற்கான பயிற்சியைப் பெற்றுக்கொள்வதற்கு இப்பாடநூல் உங்களுக்குக் கைகொடுக்கும் என நான் எண்ணுகிறேன்.

இப்பாடநூலாக்கத்தில் பங்களிப்புச் செய்த எழுத்தாளர், பதிப்பாசிரியர் குழு உறுப்பினர்களுக்கும் கல்வி வெளியீட்டுத் திணைக்கள உத்தியோகத்தர்களுக்கும் எனது நன்றிகள் உரித்தாகட்டும்.

**டபிள்யூ. எம். ஜயந்த விக்கிரமநாயக்க**
*கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்*
*கல்வி வெளியீட்டுத் திணைக்களம்*
*இசுருபாய*
*பத்தரமுல்ல.*
*2019.04.10*

**கண்காணிப்பும் மேற்பார்வையும்**

டபிள்யூ. எம். ஜயந்த விக்கிரமநாயக்க — கல்வி வெளியீட்டு ஆணையாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

**வழிகாட்டல்**

டபிள்யூ. ஏ. நிர்மலா பியசீலி — ஆணையாளர் (அபிவிருத்தி)
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

**இணைப்பாக்கம்**

ஜே. சந்திரபாலன் — உதவி ஆணையாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

**பதிப்பாசிரியர் குழு**

பேராசிரியர் ஹங்குரங்கெத்த தீரானந்த தேரர்
BA, MA (பேராதனை)
Ph.D (இந்தியா)
வரலாறு மற்றும் தொல்பொருள் கல்விப் பிரிவு
பேராதனைப் பல்கலைக்கழகம்.

பேராசிரியர் ராஜ் சோமதேவ
BA (விஷேட), M.Phil (களனி)
Ph.D
தொல்பொருள் பட்டப்பின் கல்வி நிறுவனம்,

பேராசிரியர் பத்மசிறி கன்னங்கர
BA, MA (ஸ்ரீ ஜயவர்தனபுர)
வரலாற்றுக் கல்விப் பிரிவு
ஸ்ரீ ஜயவர்தனபுர பல்கலைக்கழகம்.

சந்திமா நிஸானி தர்மபால
BA, MA (களனி ) PGDE (கொழும்பு)
MSc (மலேசியா)
சிரேஷ்ட விரிவுரையாளர்
தேசிய கல்வி நிறுவகம்.

## எழுத்தாளர் குழு

அருட்சகோதரி மேரி டொனேட்டா — ஓய்வு நிலை பிரதி அதிபர்.
BA (பேராதனை)
MA (இந்தியா)
PGDE (தேசிய கல்வி நிறுவகம்)

கே. எஸ். ரஞ்ஜனி — ஆசிரிய ஆலோசகர்
BA (ஸ்ரீ ஜயவர்தனபுர) — வலயக் கல்விக் காரியாலயம், ஹொரணை.
MA (இலங்கை திறந்த பல்கலைக்கழகம்)
PGDE (தேசிய கல்வி நிறுவகம்)

டப்ளியு. ஏ. இந்திராணி — ஆசிரிய சேவை
B. Ed (கொழும்பு) — பாலன் இயேசு தேசிய பாடசாலை,
இரத்தினபுரி.

## பதிப்பாசிரியர் (மொழி)

எஸ். பாலசுந்தரம் — ஓய்வு நிலை பிரதி ஆணையாளர்
பரீட்சைத் திணைக்களம்.

## சரவை நோக்கு

ஆர். கருணா — ஆசிரியர்
மட்/பட்/ முனைத்தீவு சக்தி மகா வித்தியாலயம்,
பெரியபோரதீவு.

## சித்திரமும் அட்டைப்படமும்

கீ. வீ. ஏ. டீ. பெரேரா — விரிவுரையாளர்
ஆசிரிய பயிற்சிக் கல்லூரி
மஹரகம.

## அட்டைப்பட ஆக்கம்

உதார லக்ஷான் பத்திரன — அபிவிருத்தி அலுவலர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## கணினி வடிவமைப்பு

ஆறுமுகம் அன்பரசி — கணினி உதவியாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

# பொருளடக்கம்

# பதிப்பாசிரியர்கள் குறிப்பு

எந்தவொரு சமுதாயத்திலும் வாழும் அங்கத்தினர் குறிப்பிட்டதொரு வரலாற்று செயன்முறைக்கு உரியவராவர். ஆதலால் அவர்களும் அவர்கள் நுகரும் கலாசாரமும் வரலாறாகும். நாம் நிகழ் காலத்தில் எதிர்நோக்கும் சில சமூக, அரசியல் பிரச்சினைகளின் அடிப்படை எமது அண்மித்த வரலாற்றிலேயே காணப்படுகிறது. அவைகளைத் தெளிவாக விளங்கிக் கொள்வதன் மூலம் வரலாற்றுக் கோலத்தைப் பற்றி சரியாக எம்மால் அறிந்து கொள்ளக்கூடியதாக இருக்கும். நிகழ்கால பிரச்சினைகளை சரியாக விளங்கிக் கொள்வதன் மூலம் சிக்கல்களைத் தீர்ப்பதற்குத் தேவையான அனுபவத்தை அதன் மூலம் பெறக் கூடியதாக இருக்கும். இதனாலேயே ஒருவர் வரலாற்றைக் கற்க வேண்டியது அவசியமாகும். தமது சமூகத்தின் தனித்துவத்தை சரியாகப் புரிந்து கொள்ளுதலானது தனி நபராக சமுதாயத் தில் வாழ்வதற்கும் ஏனையோருடன் குழுவாகப் பொதுக் குறிக்கோளின் பொருட்டு செயற்படுவதற்குமாக வழியாக அமையும்.

இந்தப் பாடநூல் அனுமதிக்கப்பட்ட வரலாற்று மரபுகளிலிருந்து விலகி மாறுபட்ட முறையில் எழுதப்பட்டுள்ளது. இந்நாட்டு பிள்ளை ஒருவன் க.பொ.த (சாதாரண) தரம் வரை கற்க வேண்டிய வரலாற்றின் தன்மை எத்தன்மையது என்பது பற்றி கருத்தில் கொள்ளப்பட்டுள்ளது. சமுதாயத்துடன் இணையும் குடிமகன் தனது வரலாற்று பாரம்பரியம் பற்றி அறிந்திருக்க வேண்டியவற்றைக் குறிப்பிட்ட பாடத்திட்டத்திற்கமைய முழுமையாக்கும் முறையில் இந்தப் பாடநூல் தயாரிக்க முயற்சி எடுக்கப்பட்டுள்ளது. அதற்கு மேலாக சாதாரண தர பரீட்சையில் சித்தியடைந்து உயர் தரம் கற்று பல்கலைக்கழகம் செல்லும் ஒருவருக்கு இந்நாட்டினதும் வேறுநாடுகளினதும் வரலாறுகளுக்கும் உரிய ஆழமான கல்வியறிவைப் பெறுவதற்கு வழியமைக்கப்பட்டுள்ளது.

மாணவர் தமது வரலாற்று சிந்தனைகளை வளர்ப்பதற்குத் தேவையான சில தலைப்புக்கள் எளிமையான முறையில் இந்நூலில் முன் வைக்கப்பட்டுள்ளன. இது நற்பிரசைகளை உருவாக்கத் தேவையான கல்வியின் அடிப்படையைப் பலப்படுத்த வழிவகுக்கும் என்பது பதிப்பாசிரியர்களின் எதிர்பார்ப்பாகும்.

பதிப்பாசிரியர்கள்
2014 மே மாதம் 25ம் திகதி
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

# 1. வரலாறு ஓர் அறிமுகம்

**அறிமுகம்**

வரலாறு, வரலாற்றைக் கற்பதன் பயன்கள் என்பன பற்றி இந்த அத்தியாயத்தில் நீங்கள் கற்கப்போகிறீர்கள். வரலாறு என்பது நீண்ட காலப்பகுதியைக் கொண் டிருப்பதால் அதனை விளங்கிக் கொள்வது எவ்வாறு என்பது பற்றி இந்தப் பாடத்தில் கற்றுக் கொள்வீர்கள்.

## 1.1 வரலாறு என்றால் என்ன?

மனிதன் நீண்ட காலமாகப் பூமியில் வாழ்ந்து வருகிறான். அந்த நீண்ட காலத்தில்,

(அ) அவன் உலகின் பல்வேறு பிரதேசங் களில் வாழ்ந்துள்ளான்.

(ஆ) அவ்வாறு வாழ்வதற்குத் தகுந்த முறையில் அவன் சூழலை அமைத் துக் கொண்டான்.

(இ) அவர்கள் ஒருவரோடு ஒருவர் இணைந்து வாழ்ந்தனர்.

இவ்வாறான நிகழ்வுகளை விளக்கும் கதையே வரலாறு ஆகும். சுருங்கக்கூறின் முற்காலத்தில் வாழ்ந்த மக்கள் பற்றிய தகவல்களைத் தேடி அறிந்து அவற்றை விளக்குவதே வரலாறு எனப்படும்.

## 1.2 எவ்வாறு வரலாற்றைக் கற்பது?

நாம் பழங்காலத்தில் வாழவில்லை. அத னால் அக்காலத்தில் நடந்தவைகள் பற்றி எமக்குத் தெரியாது. நீங்கள் பின்வருவன பற்றி சிந்தியுங்கள்.

(அ) எனது தாத்தாவின் தாயாரை நான் கண்டதில்லை.

(ஆ) எனது பாடசாலை நிர்மாணிக் கப்பட்ட விதத்தை நான் பார்த்த தில்லை.

(இ) எமது கிராமத்துக்கு சேவை செய்த மூத்தோர் பற்றி எனக்குத் தெரியாது.

இவை அனைத்தும் உமது வாழ்க்கை வரலாற்றுடன் தொடர்புடையன. இவை பற்றி நீங்கள் எவ்வாறு அறிந்து கொள் வீர்கள்?

(அ) எனது தாத்தாவின் தாயாரைப் பற்றி என் அப்பா எனக்குக் கூறியுள்ளார்.

(ஆ) எனது பாடசாலை நிர்மாணிக்கப் பட்ட விதம் பற்றிப் பாடசாலைச் சஞ்சிகையின் கட்டுரையொன்றில் விபரிக்கப்பட்டுள்ளது.

(இ) எமது கிராமத்துக்கு சேவை செய்த மூத்தோர் பற்றிப் பாடசாலைக் கூட்டத்தில் அதிபர் விளக்கிக் கூறினார்.




கடந்த காலத்தைப் பின்நோக்கிப் பார்த்து அக்காலத்தில் நிகழ்ந்தவற்றைக் கற்றுக் கொள்ளல் வரலாற்றைக் கற்றலில் அடங்கும்.

வரலாற்றைக் கற்கும் பொழுது உங்களுக்கு இவ்வாறான சிக்கல்களும் ஏற்படலாம்.

(அ) எமது நாட்டு மன்னர்களின் சிம்மாசனங்கள் எவ்வாறானவை?

(ஆ) பழங்காலத்தில் எமது நாட்டில் பயன்படுத்தப்பட்ட நாணயங்கள் யாவை?

- புராதன சிம்மாசனம் ஒன்று கொழும்பிலுள்ள தேசிய அருங் காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ளது.
- பழைய நாணயங்கள் பலவற்றை நாம் அருங்காட்சியகத்தில் பார்த்துள்ளோம்.

சிம்மாசனம் எவ்வாறானது என்பதனை அதனைப் பார்ப்பதன் மூலம் நீங்கள் விளங்கிக் கொள்ள முடியும். பழைய நாணயங்களைப் பார்ப்பதன் மூலம் அவை பற்றிய அறிவினைப் பெற்றுக் கொள்ள முடியும்.



உரு 1.1 வரலாறு பற்றிய பல தகவல்களை மூத்தோரிடமிருந்து கேட்டு அறிந்து கொள்ளலாம்.

முற்காலத்தில் எழுதப்பட்ட நூல்களின் மூலமும் நாம் வரலாற்றை அறிந்து கொள்கின்றோம். அல்லது முற்காலத்தில் வாழ்ந்த மக்கள் பயன்படுத்திய பொருள்களில் தற்போது எஞ்சியிருப்பவைகளிலிருந்து அறிந்து கொள்கின்றோம்.

இந்த இரு முறைகளையும் விட எமது மூத்தோர் கூறும் கதைகளிலிருந்தும் நாம் வரலாறு பற்றி அறிகிறோம். வரலாறு பற்றிய அறிவினைப் பெற்றுக் கொள்வதற்கு உதவும் இவை அனைத்தையும் குறிப்பிடுவதற்குப் பொதுவான ஒரு பெயர் உண்டு. அதுவே மூலாதாரங்கள் எனப்படும்.

வரலாற்றினைக் கற்பதற்குப் பயன்படும் மூலாதாரங்கள் இரு வகைப்படும்.

(அ). **இலக்கிய மூலாதாரங்கள்** (பழைய நூல்கள், கர்ண பரம்பரைக் கதைகள் என்பன)

(ஆ). **தொல்பொருள் மூலாதாரங்கள்**

(புராதன காலப் பொருள்கள், கட்டிடங்கள், அவைகளின் சிதைவுகள், புராதன காலத்தில் பயன்படுத்தப்பட்டு எஞ்சியுள்ள வேறு பொருள்கள் என்பன.)

உதாரணமாக : மனித எலும்புக் கூடுகள், மனிதனால் உணவுக்கென பயன்படுத்தப்பட்டு எஞ்சியிருப்பவை.

நடந்து முடிந்தவைகளாக இருப்பினும் அவற்றிலிருந்து நாம் பெறும் படிப்பினைகள் நிகழ்காலத்தை மேலும் பயனுள்ளதாக அமைத்துக் கொள்ள எமக்கு உதவியாக இருக்கும்.

நாம் இதனை இலகுவான உதாரணம் ஒன்றின் மூலம் விளங்கிக்கொள்ள முயலுவோம். விவசாயத்தின் பொருட்டு இன்று பயன்படுத்தப்படும் கிருமிநாசினி, இரசாயன உரம் என்பனவற்றினால் சூழல் மாசடைதல் இன்று நாம் நோக்கும் முக்கிய பிரச்சினையாகும். முற்காலத்தில் இலங்கை 'கீழைத் தேசங்களின் தானியக் களஞ்சியம்' என்று அழைக்கப்பட்டது. இதற்கான காரணம் இலங்கையில் விவசாயம் சிறப்பான முறையில் நடைபெற்றமையாகும். அக்காலத்தில் விவசாயத்தினால் சுற்றாடல் மாசடைந்ததற்கான எவ்விதமான சான்றுகளும் இல்லை. முற்காலத்தில் மக்கள் சுற்றாடல் மாசடையாது விவசாயத்தை எவ்வாறு மேற்கொண்டனர் என்பதை அறிவதன் மூலம் தற்காலத்தில்

**இலங்கையின் வரலாற்றைக் கற்பதற்கு உதவும் சில மூலாதாரங்கள்**

| மூலாதாரம் | வகை | எழுதப்பட்ட / உரிய காலம் | ஆக்கியோர் / நிர்மாணிக்கப்பட்டவை |
|---|---|---|---|
| தீபவம்சம் | இலக்கிய மூலாதாரம் | கி.பி. நான்காம் நூற்றாண்டு | கண்டறியப்படவில்லை |
| மகாவம்சம் | இலக்கிய மூலாதாரம் | கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு | மகாவிகாரையைச் சேர்ந்த மகாநாம தேரர் |
| பொலன்னறுவை கல்விகாரை | தொல்பொருள் மூலாதாரம் | கி.பி. பன்னிரெண்டாம் நூற்றாண்டு | முதலாம் பராக்கிரமபாகு மன்னன் |

மேற்கொள்ளப்படும் விவசாயத்தினால் ஏற்படும் சிக்கல்களைத் தீர்ப்பதற்கான வழிமுறைகளைக் கண்டறிந்து கொள்ள முடியும். தற்காலத்தில் நாம் பார்க்கும், கேட்கும் விடயங்கள் நிகழ்வது எவ்வாறு என்பதனை விளங்கிக் கொள்வதற்கு வரலாற்றைப் பின்னோக்கிப் பார்த்தல் அவசியமாகும்.

## 1.3 வரலாற்றைக் கற்பதன் மூலம் பெறும் பயன்கள்

முற்காலத்தில் நிகழ்ந்தவை தற்போது முடிவுற்றிருப்பதால் அவை பற்றிக் கற்பதில் பயன் உள்ளதா என நீங்கள் எண்ணலாம். முற்காலத்தில் நிகழ்ந்தவை



சிம்மாசனம் என்பது
எவ்வாறானது ?!!!




**செயற்பாடு - 1**



உமது பாடசாலை வரலாற்றை அறிந்து கொள்ள உதவிய மூலாதாரங்களைக் கொண்டு பின்வரும் அட்டவணையைப் பூரணப்படுத்துக.

| இலக்கிய ஆதாரங்கள் | தொல்பொருள் ஆதாரங்கள் |
|---|---|
| | |

எடுத்துக்காட்டாக நீங்கள் எழுதும் எழுத்து எவ்வாறு இந்த விதத்தில் உருவானது என்ற வினா உங்களுக்கு எழலாம். அன்றேல் உமது நண்பனொருவன் இதனைப் பற்றி உம்மிடம் கேட்கலாம். அதனை விளங்கிக் கொள்வதற்கு எழுத்துக்களின் வரலாற்றை நீங்கள் தேடியறிய வேண்டும். இலங்கையில் எழுத்துக்கலைக்கு இரண்டாயிரத்து இரு நூற்றி ஐம்பது ஆண்டுகள் அளவிலான வரலாறு உண்டு. தற்போது நாம் தமிழ் மொழியில் பயன்படுத்தும் 'க' என்ற எழுத்து, இன்று எழுதப்படுவது போன்று எவ்வாறு படிப்படியாக முன்னேற்றமடைந்தது என்பதை உரு 1.3 இல் காணப்படும் முறையை அவதானித்து விளங்கிக் கொள்ளவும்.

முற்காலத்தில் வாழ்ந்த எம் முன்னோர் அடைந்த வெற்றியைப் போலவே அவர்கள் தோல்வியைத் தழுவிய சந்தர்ப்பங்களையும் அறிவதன் மூலம் தற்காலத்தில் நாம் முகங்கொடுக்கும் சிக்கல்களுக்கு தீர்வு காண வழி ஏற்படுகின்றது. அது மட்டுமன்றி அந்த அறிவின் ஒளியில் எதிர்காலம் எவ்வாறு அமைய வேண்டும் என சிந்திப்பதற்கும், அதன்படி எமது நாட்டினை எவ்வாறு முன்னேற்றலாம் என்பதனைத் தீர்மானிக்கவும் வரலாறு எமக்கு வழிகாட்டுகிறது.

வெவ்வேறுப்பட்ட மக்கள் குழுவினர் வாழும் சமூகம் ஒன்றில் அவரவர்களின் பழக்கவழக்கங்கள் நம்பிக்கைகளைப் பிரதானமாகக் கொண்ட கலாசார அம்சங்களுக்கு மதிப்பளித்தலுடன் ஒற்றுமையுடனும் சக வாழ்வை மேற்கொள்வதற்குமான ஆற்றல் வரலாற்றைக் கற்பதனால் எமக்குக் கிடைக்கிறது.

## 1.4 வரலாற்றுக் காலத்தை அளவிடுவது எவ்வாறு?

வரலாறு என்பது நீண்ட காலத்தை உள்ளடக்குவதால் அதனை சரியாக அளவிடுதல் வரலாற்றைக் கற்பதற்குத் தேவையான முக்கிய விடயமாகும்.



கி.மு.
250



கி.பி.
250



கி.பி.
800



கி.பி.
1200

உரு 1.2 1500 ஆண்டுகளாக 'க' என்ற எழுத்து தற்போதைய நிலையை அடைந்த விதம்



**செயற்பாடு - 2**

உமது பாடசாலை பற்றிய கட்டுரை ஒன்று வரைக.

வரலாற்றில் பல்வேறு நிகழ்வுகளைக் கால அடிப்படையில் அளவிடுவதற்குப் பல வழிகள் உள்ளன. இதன் பொருட்டுப் பயன்படுத்தப்படும் எளிமையான முறை :

(அ) கிறிஸ்துவுக்கு முன் (கி. மு)

(ஆ) கிறிஸ்துவுக்குப் பின் (கி. பி)

என்பனவாகும்.

இந்த முறை கிறிஸ்துநாதரின் பிறப்பினை அடிப்படையாகக் கொண்டே கணிக்கப் படுகிறது.

கிறிஸ்துவின் பிறப்பிற்கு முன்னரான காலம் கிறிஸ்துவுக்கு முன் என்றும், கிறிஸ்துவின் பிறப்பிற்குப் பிற்பட்ட காலம் கிறிஸ்துவுக்குப் பின் என்றும் அறிமுகமாகி றது.

எடுத்துக்காட்டாக மகிந்ததேரர் இலங்கைக்கு வருகை தந்தது கிறிஸ்து பிறப்பிற்கு 250 ஆண்டுகளுக்கு முன்பாகும். எனவே அந்த நிகழ்வு கி. மு. 250 ஆண்டுகள் எனப்படு கிறது. மின்னேரியாக் குளத்தைக் கட்டுவித்த மகாசேன மன்னனின் ஆட்சியின் தொடக்கம் கி. பி. 274 ம் ஆண்டிலிருந்தாகும்.

இவை தவிர புத்த வருடம், சாலிவாகன சகாப்தம் என்ற முறைகளும் காலத்தை அளவிடப்பயன்படுத்தப்படுகின்றன.

முற்காலத்தில் இந்தியாவிலும், இலங் கையிலும் இம்முறை வழக்கில் இருந்தது. எமது வீடுகளிலுள்ள பஞ்சாங்கங்களிலும் இவ்விதமாக ஆண்டுகள் குறிப்பிடப்பட் டுள்ளமையை அவதானிக்கலாம். இந்த முறை சில சந்தர்ப்பங்களில் தற்போதும் வரலாற்று ஆண்டுகளைக் கணிப்பிடப் பயன்படுத்தப்படுகிறது.

புத்த வருடமானது புத்தபெருமான் பரி நிர்வாணமடைந்த நாள் தொடக்கம் கணிக்கப்படுகிறது. புத்தபெருமான் பரிநிர் வாணம் அடைந்த வருடம் தொடர்பாக அறிஞர்களிடையே பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்ற போதிலும் பொதுவாகக் கி.மு. 544 ஆண்டில் இடம்பெற்றது என ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது.

சாலிவாகன சகாப்தம் இந்து நாட்காட்டி களில் பிற்காலத்தில் தோன்றிய ஒன்றாகும். ஆயினும் இதற்கு முற்பட்ட இந்து நாட்காட்டி முறைகளும் உள்ளன. அவ் வகையில் கலியுகவருஷ நாட்காட்டி முறை ஒன்றாகும். சாலிவாகன சகாப்த முறை கி.பி. 78 ஆம் ஆண்டு ஆரம்பமாகிறது. இந்தியாவின் மேற்குப் பிரதேசத்தை ஆட்சி செய்த கௌதமி புத்திர சதகர்ணி என்பவர் சாகர்களைத் தோற்கடித்து அப்பிரதேசத் தைக் கைப்பற்றியதன் நினைவாக அவரால் இந்த முறை தோற்றுவிக்கப்பட்டது.

முஸ்லிம்கள் தமது சமய விழாக்களைக் கொண்டாடுவதற்காகக் காலங்களை அள விடும் முறையும் உண்டு. அது ஹிஜ்ரி ஆண்டு எனப்படும். அது கி.பி. 622 ஆம் ஆண்டுடன் ஆரம்பமாகிறது. இஸ்லாமிய சமயத் தலைவரான முகம்மது நபி அவர்கள் மக்காவை விட்டு மதீனாவுக்குச் சென்ற ஆண்டு அதுவாகும்.




முற்காலத்தில் இருந்தவற்றில் பல தற்போது புதையுண்டுள்ளன. அவற்றின் அழிவுகள், எச்சங்கள் என்பன பூமியின் (தரையின்) மண் படைகளில் எஞ்சியுள்ளன. கவன மாக அவற்றை அகழ்வு செய்வதன் மூலம் வரலாறு பற்றி அறிய முடியும்.

உரு 1.3

இவைகளைத் தவிர இலட்சக்கணக்கான பழைமை வாய்ந்த வரலாற்றை அளவிடு வதற்கு விஞ்ஞான ஆய்வுகூடங்களில் நடாத்தப்படும் ஆய்வுகள் பலவும் உண்டு. முறையாகப் பூமியை அகழ்வதன் மூலமும் இறந்த காலத்தை அளவிட முடியும். அது தொல்பொருள் அகழ்வுகள் எனப்படும். தொல்பொருள் அகழ்வுகளில் தரையின் கீழுள்ள (பூமியின்) மண்படைகளைக் காணமுடியும். முற்காலத்தில் நடை பெற்ற பல்வேறுபட்ட நிகழ்வுகளுடன் தொடர்புடைய எளிதில் அழிவுறாத பல பொருள்கள் இவ்வாறான மண்படைகளில் அடங்கி இருக்கின்றன. பூமியின் மேல் பகுதியில் உள்ள படைகளில் அண்மைக் காலத்துக்குரியவையும் படிந்திருப்பதைக் காணலாம்.

கிறிஸ்துவுக்கு முன், கிறிஸ்துவுக்குப் பின் என்பதன் அடிப்படையில் நடைபெற்ற முக்கிய வரலாற்று நிகழ்வுகள் பின்வரு மாறு,

இலங்கை சுதந்திரமடைந்தது கி.பி. 1948

மகாசேன மன்னனின் ஆட்சி ஆரம்பம் கி.பி. 274

வசப மன்னனின் ஆட்சி ஆரம்பம் கி.பி. 67

இயேசுகிறிஸ்துநாதரின் பிறப்பு கி.பி. 1

புத்தர் பெருமான் பரிநிர்வாணம் அடைந்தது கி.மு. 544

**புத்த வருட முறைப்படி நடைபெற்ற முக்கிய வரலாற்று நிகழ்வுகள்**

மகாசேன மன்னனின் ஆட்சி ஆரம்பம் புத்தவருடம் 818

வசப மன்னனின் ஆட்சி ஆரம்பம் புத்த வருடம் 611

இயேசுகிறிஸ்துநாதரின் பிறப்பு புத்த வருடம் 544

புத்தர்பெருமானின் பரிநிர்வாணம் புத்த வருடம் 1

**முக்கிய விடயங்கள்**

1. மனிதன் முற்காலத்தில் செய்தவை கூறியவை, அனைத்தும் வரலாற்றுக்கு உரித்தானவை.
2. வரலாறு பற்றி அறிந்து கொள்வதற்கு உதவுபவை மூலாதாரங்கள் எனப் படும். அவை இலக்கிய மூலாதாரங் கள், தொல்பொருள் மூலாதாரங்கள் என இரு வகைப்படும்.
3. வரலாற்றைக் கற்பதன் மூலம் தற்கா லத்தில் நடைபெறுவதை விளங்கிக் கொள்ளவும், எதிர் காலத்தில் எம்மால் செய்ய வேண்டியவைகளைத் திட்ட மிடவும் வழி ஏற்படுகிறது.
4. வரலாற்றில் சில சம்பவங்கள் நடை பெற்ற காலத்தை அறிந்து கொள்ள வழிமுறைகள் உண்டு. கிறிஸ்து நாதரின் பிறப்பை அடிப்படையாகக் கொண்ட ஆண்டும் முறையும், புத்தர் பெருமான் பரிநிர்வாணம் அடைந் ததை அடிப்படையாகக் கொண்ட ஆண்டும் முறையும் இவற்றில் முக்கியமானவையாகும்.

**செயற்பாடு - 3**



பின்வரும் நிகழ்வுகளைக் கிறிஸ்து வருடத்திலும், புத்தவருடத்திலும் எழுதுக.

1. உமது பிறந்த தினம்
2. நடைமுறை ஆண்டு

# 2. ஆதி மனிதன்

**அறிமுகம்**

மனிதன் பூமியில் வாழ்கிறான். பூமி எம் அனைவரதும் உலகமாகும். மனிதனுக்கு மட்டுமன்றி மிருகங்கள், தாவரங்கள் அனைத்திற்கும் தங்குமிடம் அதுவாகும். அவை அனைத்தும் உயிர் வாழும் பொருட்டு உணவையும் ஏனையவற்றையும் வழங்குவதும் பூமியாகும். பூமியில் வாழும் மிருகங் கள், தாவரங்கள் என்பன பல வேறுபாடுகளைக் கொண்டுள்ளன. பூமியில் நிலவும் பல்வேறுபட்ட சூழலின் காரணமாகவே இவ்வாறான வேறுபாடுகள் காணப்படுகின்றன. மனிதன் உட்பட மிருகங்கள், தாவரங் கள் அனைத்தின் மீதும் பூமி தாக்கத் தை ஏற்படுத்துகிறது. எனவே நாம் வாழும் பூமியைப் பற்றி அறிவது முக்கியமானதாகும். பூமியின் தோற் றம், உயிரினங்களின் தோற்றம் என்பன வற்றைப் பற்றி இந்தப் பாடத்தில் நீங்கள் கற்கக் கூடியதாக இருக்கும்.

## 2.1 மனிதன் தோன்றிய சூழல்

**புவியும் உயிரினங்களும் உருவாதல்**

நாம் வாழும் பூமி ஒரு கோள் ஆகும். இது ஏறக்குறைய நாலாயிரத்து ஐந்நூற்றி நாற்பது மில்லியன் ஆண்டுகளுக்கு முன்னர் தோற்றம் பெற்றுள்ளது. பூமி எவ்வாறு தோன்றியது என்பது பற்றி அறிஞர்களிடையே பல்வேறுபட்ட கருத்துக்கள் நிலவுகின்றன. எவ்வாறெ னினும் அது விண்ணிலிருந்த தூசிப் படலத்திலிருந்து தோன்றியதென்பது பொதுவான நம்பிகையாகும். அந்த தூசிப்படலம் 'நிகாரிகா' என்ற பெயரால் அழைக்கப்படுகிறது. ஆங்கிலப் புத்த கங்களில் நெபியுலா (nebula) என அது குறிப்பிடப்படுகிறது. பூமி தோற்றம் பெறும்போது அதிக வெப்பமாக இருந்தது. பின்னர் படிப்படியே அது குளிர்ச்சி அடையத் தொடங்கியது. எனினும் புவியின் நடுப்பகுதி தற்போதும் பெரும் வெப்பத்தைக் கொண்டுள்ளது.



உரு 2.1 விண்ணிலுள்ள தூசிப் படலத்திருந்து பூமி தோன்றியமை



உரு 2.2 யப்பானின் சுகுரஜிமா எரிமலை வெடித்துப் புவியின் மையத்தில் உள்ள லாவா வெளியேறும் விதம்.

அதன் வெப்பம் 6000 செல்சியஸ் என அளவிடப் பட்டுள்ளது. நீரானது செல்சியஸ் 100 இற்கு வெப்பமடைந்ததும் கொதிக்கும். எனவே புவியின் உட்பகுதி யின் வெப்பத்தின் அளவினை உங்களால் நினைத்துப் பார்க்க முடியும். எரிமலைகள் வெடிக்கும் போது அதிலிருந்து வெளியே வருவன புவியின் நடுவில் அவ்வாறு வெப்பமடைந்திருப்பவையாகும். அவை 'லாவா' எனப்படும்.

பூமி உருவாகிச் சிறிது காலம் கடந்த பின்னரே அதில் உயிரினங்கள் தோன்றின. அவ்வாறு தோன்றிய உயிரினம் கண்ணுக் குத் தெரியாத அளவிற்கு சிறிதாக இருந்தது. அது புரோகரியோட்டா பக்டீரியா எனப்பட்டது. அந்த பக்டீரியா இற்றைக்கு இரண்டாயிரத்து ஐந்நூறு மில்லியன் ஆண்டுகளுக்கு முன்னரே தோன்றியது.

இற்றைக்கு ஐந்நூற்றி நாற்பத்திரெண்டு மில்லியன் ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த உயிரினமொன்றின் சுவடு கனடாவில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. 4 -7 சென்றி மீற்றருக்கு இடைப்பட்ட நீள முடைய இந்த உயிரினம் கடலடியில் வாழ்ந்துள்ளது. இதற்கு உண்பதற்கு வாய் இருந்ததுடன் ஐந்து கண்களும் இருந்தன. அது ஒபபீனியா எனப்பட்டது.



உரு 2.3 புரோகரியோட்டா பக்டீரியாவின் அமைப்பு



உரு 2.4 இற்றைக்கு ஐந்நூற்றி நாற்பத்திரண்டு மில்லியன் ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த ஒபபீனியாவின் பாறைப்படிவு அடையாள மாகும். இது கனடாவில் கண்டுபிடிக்கப் பட்டுள்ளது.

உலகில் முதன்முதல் நீரிலேயே உயிரினங் கள் தோன்றின. பிற்காலத்திலேயே அவைகள் தரையில் தோன்றின. முதன் முதலில் தரையில் தோன்றியவை பாதங்கள் பலவற்றைக் கொண்ட மர அட்டை போன்ற உயிரினங்களாகும். இது தோன்றியது இற்றைக்குப் நானூற்றி இருபது மில்லியன் ஆண்டுகளுக்கு முன்னராகும். அந்தக் காலம் ‘சிலுரியன் யுகம்’ எனப்படும்.

மிருகங்களுக்கு முன்னர் தாவரங்களே தரையில் தோன்றின. அது இற்றைக்குப் ஐந்நூற்றி நாற்பத்திரண்டு மில்லியன் ஆண்டுகளுக்கு முன்னர் ‘பெலியொ சொயிக்’ எனப்படும் யுகத்திலாகும்.

புவியில் தாவரங்கள், உயிரினங்கள் தோன் றியதுடன் ஒப்பிடுகையில் மனிதன் மிகவும் பிந்திய காலத்திலேயே தோன்றியுள்ளான். இது பற்றிய விளக்கம் அடுத்த பாடத்தில் விளக்கப்பட்டுள்ளது.

## முக்கியகருத்துக்கள்

1. புவியானது இற்றைக்கு நாலாயிரத்து ஐந்நூற்றி நாற்பது மில்லியன் ஆண்டுகளுக்கு முன்னர் ஆகாயத்தில் இருந்த தூசிப்படலத்திலிருந்து தோற்றம் பெற்றது.
2. புவியானது வெப்பமாக இருந்து படிப்படியாக குளிர்ச்சி அடைந்தது. எனினும் அது இன்னும் முற்றிலும் குளிர்ச்சி அடையவில்லை.
3. பிற்காலத்திலேயே புவியில் உயிரி னங்கள் தோன்றின. உயிரினங்கள் முதலில் நீரிலேயே தோன்றின.
4. உலகில் முதன்முதலில் தோன்றியது மிகச் சிறிய பக்டீரியாவாகும்.
5. தரையில் முதலில் தோன்றியது தாவரங்கள் ஆகும். பின்னர் விலங்கு கள் தோன்றின.



## செயற்பாடு - 4

ஆசிரியரின் உதவியுடன் ஒவ்வொரு காலத்திலும் தோற்றம் பெற்ற மிருகங் கள், தாவரங்கள், மனிதர்கள் பற்றிய விளக்கத்தினைப் பெறக்கூடிய படங் களை சேகரித்து ஒழுங்குபடுத்துக.

## 2.2 ஆதி மனிதனின் பரம்பல்

### மனிதனின் தோற்றம்

மனிதன் இயற்கையுடன் இணைந்த விலங்காவான். எனினும் அவன் ஏனைய விலங்குகளை விட முன்னணியில் இருக்கிறான். பல்வேறு விதங்களில் நிர்மாணிக்கும் ஆற்றல் (தொழில் நுட்பம்), கருத்துப் பரிமாற்றம் செய்யும் ஆற்றல் (மொழி), ஆடல் பாடல் (கலை) போன்ற அழகியல் விடயங்கள் என்பன மனிதனால் வெளிபடுத்தப்படும் செயல்களாகும். ஏனைய விலங்குகளிடையே இவற்றைக் காணமுடியாது. தூரத்திலுள்ள கோள்களைக் கூட மனிதன் இன்று ஆட்கொண்டு விட்டான். நீண்ட காலமாக சவால்களுக்கு முகங்கொடுத்ததன் விளைவாகவே அவன் இவ்வாறு முன்னேற்றம் அடைந்துள்ளான். ஏனைய விலங்குகளுக்கிடையே மற்றுமொரு விலங்காக விளங்கிய மனிதன் ஏனைய விலங்குகள் அனைத்தையும் விஞ்சி எவ்வாறு முன்னேறினான் என்பதை இந்தப் பாடத்தின் மூலம் நீங்கள் கற்றுக்கொள்ளுவீர்கள். இவ்வாறு கற்பதன் மூலம் மனித இனத்தைச் சேர்ந்த உங்கள் சமூகத்திற்கு நீங்கள் ஆற்ற வேண்டிய பணிகளை விளங்கிக் கொள்வதற்கு உங்களுக்குச் சந்தர்ப்பம் கிடைக்கும்.

மனிதன் குரங்கிலிருந்து தோன்றினான். உண்மையில் இது சுவையான கதையாகும். இற்றைக்கு இரண்டரை மில்லியன் வருடங்களுக்கு முன்னர் நாம் வாழும் இந்தப் புவியானது மிகவும் குளிர்ச்சியாக இருந்தது. இந்தக்காலம் 'பெரும் பனி யுகம்' எனப்பட்டது. இந்தப் பனியுகம் ஆரம்பமான காலத்தில் ஆபிரிக்காவில் வாழ்ந்த சிம்பன்சிகளில் ஒரு பிரிவு தமது ஏனைய உறவுகளை விட வித்தியாசமாக வளரத் தொடங்கியது.

அக் காலத்தில் நிலவிய கடுங்குளிருக்கு முகங்கொடுக்க வேண்டியிருந்தமையாலும் உணவு பற்றாக்குறையின் காரணமாகத் தமக்குப் பழக்கமில்லாத உணவினை உட்கொள்ள வேண்டி இருந்ததாலும் இந்த சிம்பன்சிகளின் பற்களிலும், முகத்திலும் மாற்றங்கள் ஏற்படலாயின. இரண்டு கால்களால் நடக்கவும் அவைகள் பழகின. இந்த மாற்றங்கள் சிம்பன்சியிலிருந்து மனிதன் தோன்றுவதற்கான பின்னணியாக அமைந்தன.

வானரக் குடும்பத்திலிருந்து மனித பரம்பரை தோன்றுவதற்கான முக்கிய காரணம் பெரும் பனிக்காலத்தில் நிலவிய காலநிலையாகும். இக்காலத்தில் புவியின் வடக்குத் தெற்குப் பகுதி முற்றாகத் தடித்த பனிப்படலத்தால் மூடப்பட்டிருந்தது. தாவரங்கள் வளரவில்லை. இதனால் உணவு தாராளமாகக் கிடைக்கவில்லை. மெமத் யானைகள் இக்காலத்திலேயே வாழ்ந்தன.

பெரும் பனியுகம் எனப்படும் மிகக் குளிரான காலத்தில் காலநிலை வெப்ப மாகிய குறுகிய காலமும் நிலவியது. அவ்வாறு அதிக குளிரான காலங்கள் நான்கும், குறுகிய வெப்பம் நிலவிய காலங்கள் நான்கும் இருந்தன. வெப்பமான காலத்தில் உணவு தாராளமாகக் கிடைத்ததால் அனைத்து உயிரினங்களுக்கும் மகிழ்வான காலம் மீண்டும் ஏற்பட்டது. வானர பரம்பரையைச் சேர்ந்த சிம்பன்சியிலிருந்து மனிதன் முன்னேறியது இக் காலத்திலாகும். இச் செயன்முறையானது **'மானிட பரிணாமம்'** எனப்படுகிறது.

உருவ அமைப்பில் ஆரம்ப காலத்தில் வானரத்திற்கும், மனிதனுக்கும் இடையில் பெரும் வேறுபாடு காணப்படாவிடினும் வானரங்கள் செய்யாத ஒன்றை மனிதன் செய்யத் தொடங்கினான். அது உபகரணங்



உரு 2.5 வானரமாக இருந்து இலட்சக்கணக்கான வருடங்களாக முன்னேறிய மனிதன் புவியில் தாக்கத்தை ஏற்படுத்தக்கூடியவனானான்.

களைப் பயன்படுத்தியமை ஆகும். இயற்கையாக நீர் பாய்ந்து செல்லும் ஓடைகளிலுள்ள வட்டமான கற்களை சேகரித்து அவற்றினால் விதைகளை இடித்து உணவாகக் கொண்டதுடன் வேறு தேவைகளுக்கும் மனிதன் அந்தக் கற்களைப் பயன்படுத்தினான்.

இவ்வாறு மனிதனது நிலையை அடைந்த வானரம் ஒஸ்ரலோபிதிகஸ் எனப் பெயர் பெற்றது. இரு கால்களாலும் நடந்து செல்லும் திறமையினால் மனிதன் வானரங்களால் செய்ய முடியாதவைகளைச் செய்யக் கூடியதாக இருந்தது. இற்றைக்கு 3.8 மில்லியன் ஆண்டுகளுக்கு முன்னர் ஒஸ்ரலோபிதிகஸ் இரு கால்களாலும் நடந்து சென்றமை தற்போது கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. காலம் செல்லச்செல்ல கற்களால் செய்யப்பட்ட ஆயுதங்களில் பல முன்னேற்றங்கள் காணப்பட்டன. கல்லொன்றால் மற்றொரு கல்லை அடித்து அதன் ஒரு பகுதியை அகற்றிக் கூர்மையான ஆயுதங்களை செய்தலே இதன் ஆரம்ப கட்டமாக அமைந்தது. இவ்வாறான முயற்சிகளில் இறங்கிய முதல் மனிதன் ஹோமோஹெபிலஸ் எனப்பட்டான். ஆற்றலுடைய மனிதன் என்பதே அதன் பொருளாகும். அவன் கி.மு. 2.3 முதல் 1.4 மில்லியன் ஆண்டுகளுக்கும் இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்துள்ளான்.



உரு 2.6 பெரும் பனி யுகத்தில் நிலவிய சுற்றாடலை சித்திரக் கலைஞன் ஒருவன் சித்திரமாக வடித்துள்ள முறை



பெரும் பனிக் காலம்





| நீண்ட குளிர் காலம் | குறுகிய வெப்பக் காலம் | நீண்ட குளிர் காலம் | குறுகிய வெப்பக் காலம் |
|---|---|---|---|

அவ்வாறான எளிமையான ஆயுதங்களைச் செய்வதற்குப் பயிற்சி பெற்றமையே இன்றைய காலத்தில் முன்னேற்றமடைந் துள்ள நவீன உபகரணங்களைச் செய்வதற்கு வழியாக அமைந்தது.

கல்லாயுதங்களை செய்ததைப் போலவே மனிதனின் முன்னேற்றத்தின் மற்றுமொரு படியாக விளங்கியது அவன் நெருப்பைப் பயன்படுத்தத் தொடங்கியதாகும். நெருப்பைக் கண்டுபிடித்ததால் உணவை நெருப்பில் சுடக் கூடியதாக இருந்தது. இதனால் உண்ணும் உணவு நன்கு சமிபாடு அடையக் கூடியதாக இருந்தது. நெருப்பினால் குளிர்காலத்தில் வெப்ப மூட்டிக் குளிர்காயக் கூடியதாக இருந்தமை வாழ்க்கையை மேலும் சௌகரியமாக்கிய துடன் உடல் அமைப்பும் அழகு பெற உதவியது.

ஆதி மனிதனால் கண்டுபிடிக்கப்பட்டவை இன்று எமக்குப் பலவழிகளிலும் பயன் படுகின்றன. அதற்கு சிறந்த எடுத்துக் காட்டாக விளங்குவது நெருப்பைக் கண்டு பிடித்தமையாகும். மனிதன் முதன்முதல் நெருப்பைப் பயன்படுத்தியமைக்கான சான்று இஸ்ரேலில் கண்டுபிடிக்கப்பட் டுள்ளது. அந்த சான்று ஏழு இலட்சத்து தொண்ணூராயிரம் (7,90,000) ஆண்டுகள் பழைமையானது. ஹோமோ இரெக்டஸ் எனப்படும் மனிதனே நெருப்பை முதன் முதல் உபயோகித்தவனாவான். அவன் இற்றைக்கு 1.8 மில்லியன் ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்துள்ளான்.

வானர பரம்பரையிலிருந்து தோன்றிய பொழுதிலும் காலஞ்செல்லச்செல்ல மனிதனின் உடலமைப்பு மாற்றமடைந்து இன்றைய நிலையில் உள்ள அமைப்பைப் பெற்றது. மனிதனின் மூளையும் படிப் படியே வளர்ச்சி அடைந்தது. இது முக்கிய நிகழ்வு ஒன்றாகும். இது வானரத்தின் மூளையை விடப் பெரிதாக வளர்ச்சி அடைந்ததுடன் மண்டையோடும் அதற்கு இசைவாக அமைந்தது. இதுவரை நீங்கள் கற்றறிந்த வானரம் மனித இனத்துடன்



உரு 2.7 25 இலட்சம் ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த ஒஸ்ரலோபிதிகசின் மண்டையோடு



உரு 2.8 இரண்டரை மில்லியன் ஆண்டுகளுக்கு முன்பிருந்து மனிதன் வானரத்திலிருந்து முன்னேற்றமான மனிதன் வரையிலும் பரிணாமம் அடைதல்.

தொடர்புபடுவது மற்றுமொரு முன்னேற்ற மடைந்த வானரத்தின் ஊடாகவாகும். அது 'ஹோமோ நியன்டதாலன்சிஸ்' எனப்படும். அது இற்றைக்கு ஆறு இலட்சம் வருடங்களுக்கு முன்னர் வாழ்ந்தது. இந்த வானரம் பெரிய மிருகங்களின் எலும்புகளைக் கொண்டு வீடுகளை அமைத்தன. அவ்வாறே காய்கறிகளை உணவாகக் கொண்டுள்ளன. அவை சிறந்த வேட்டைகாரர்களாகவும் திகழ்ந்துள்ளன. வீடுகள் அமைத்தல், உணவை சமைத்து உண்ணுதல் என்பனவற்றை நாம் முற் காலத்தில் வாழ்ந்த மனிதனிடமிருந்து பழகிக்கொண்டோம்.



உரு 2.10 ஹோமோசேபியன் மனிதனால் இற்றைக்கு முப்பதாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் செய்யப்பட்ட குழல். இது மிருகத்தின் எலும்பிலிருந்து செய்யப்பட்டது.



உரு 2.9 நன்கு அமைக்கப்பட்ட பழைய கல்லாயுதம்

வானர பரம்பரையில் தோன்றிய பொழுதி லும் காலம் செல்லச்செல்ல மனிதனின் உடல் வானரத்திலிருந்து வேறுபட்டு இன்று இருப்பது போன்ற அமைப்பினைப் பெற்றது. படிப்படியே மூளை வளர்ச்சி அடைந்து அது வானரத்தின் மூளையை விடப் பெரிதாகி மனிதனின் மண்டை யோடு அதற்கு இசைவாக மாற்றமடைந் தது. இரண்டு மில்லியன் ஆண்டுகளாக மனிதன் தனது திறமையை வளர்த்துக் கொண்டான். புதியவைகளை செய்வதற்கு அவன் எண்ணியதால் அவனது மூளை நன்கு விருத்தியடைந்தது. இதனால் இற்றைக்கு ஒரு இலட்சம் ஆண்டுகளுக்கு (100,000) முன்னர் அவனால் பிறருடன் கருத்துக்களைப் பரிமாறிக் கொள்ளக் கூடிய மொழியையும், உணர்வினை வெளிப்படுத்த ஆடல், பாடல், ஓவியம்

என்பனவற்றையும் பயன்படுத்தக்கூடிய தன்மை ஏற்பட்டது. இவ்வாறான செயற்பாடுகளைச் செய்த மனிதன் ஹோமோசேபியன் எனப்படுகிறான். அது எம் அனைவரதும் நெருங்கிய உறவு ஆகும். நாம் அனைவரும் ஹோமோசேபியன் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்.

ஆதிமனிதனின் கண்டுபிடிப்புகள் இன்றும் எமக்குப் பயன்தரக்கூடியதாயுள்ளன. இதற்கு சிறந்த உதாரணம் நெருப்பைக் கண்டுபிடித்தலும் அதன் பயன்பாடு பற்றித் தெரிந்து கொண்டமையுமாகும். (வீடமைத்தல், உணவை சமைத்து உண்ணுதல் என்பவையும் ஆதி மனிதனிடமிருந்து நாம் கற்றுக் கொண்டவையே யாகும்.)



**செயற்பாடு - 5**

மனித பரிணாம வளர்ச்சிக் கட்டங்களை வரிசைப்படுத்துக.

## 2.3 கலாசார வளர்ச்சி

சிம்பன்சியில் இருந்து மனிதன் வரையில் தமது உடலையும், மூளையையும் வளர்ச்சியடையச் செய்து கொண்ட மனிதன், நீண்ட காலப் பகுதியில் தான் வாழும் முறையையும் மாற்றிக் கொண்டான். இது கலாசார மாற்றம் எனப் படும். முற்காலத்திலிருந்து உருவாக்கிய கல்லாயுதங்களின் தன்மையை மனிதன் மாற்றிக் கொண்ட விதத்தைக் கற்கும் போது இதனை நாம் நன்கு அறியக் கூடியதாக உள்ளது.

இரண்டரை மில்லியன் வருடங்கள் அளவிலான நீண்ட காலத்தில் மனிதன் தன் வாழ்க்கையை அமைத்துக் கொண்ட முறை படிப்படியாக மாற்றமடைந்தது. தான் செய்த கல்லாயுதங்கள், இருப்பிடங் கள், உணவு வகைகள் என்பன இவ்வாறு மாற்றமடைந்ததைக் காணக்கூடியதாக உள்ளது. நீண்ட காலமாக மனிதன் அடைந்த வெற்றி எவ்வாறானது என்ப தைத் தெளிவுபடுத்திக் கொள்ளத் துணை புரிவது மனிதனால் செய்யப்பட்ட கல்லாயுதங்கள் ஆகும். இற்றுப் (இலகுவில் சிதைவடையாத) போகாத படியால் கல்லாயுதங்கள் நீண்ட காலமாக நிலைத்திருந்தன. காலம் செல்லச்செல்ல மனிதனால் செய்யப்பட்ட கல்லாயு தங்க ளின் அமைப்பு, அளவு அதன் வினைத்திறன் என்பன முன்னேற்றமடைந்து செல்வதைக் காணக்கூடியதாக உள்ளது. ஆயுதங்களின் தன்மைக்கு அமைய மனிதனின் கலாசார வளர்ச்சி மூன்று முக்கிய கட்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவையாவன :

1. பழைய கற்காலம்
2. இடைக் கற்காலம்
3. புதிய கற்காலம்

## பழைய கற்காலத்தில் மனிதன் எவ்வாறு வாழ்ந்தான்?

பழைய கற்காலத்தில் மனிதன் குழுவாக இடத்துக்குஇடம்கூட்டமாகக்குடிசைகளை அமைத்து வாழப் பழகிக் கொண்டான். அவ்வாறான குழுவில் 20, 30 வரையிலான அங்கத்தவர்கள் கொண்ட குடும்பங்கள் அடங்கின. இறந்த தமது உறவினரின் மரணச் சடங்குகளை நடாத்துவதற்கு மனிதன் பழகியதும் இந்த யுகத்திலாகும். அவ்வாறான சடங்குகளில் அவர்கள் அனுசரித்த முக்கிய செயற்பாடுகளில் ஒன்றாக அமைந்தது இறந்தவர்களின் எலும்புகள் மீது வர்ணம் பூசுவதாகும். வர்ணம் தயாரிக்கும் பொருட்டு நிறக் கற்கள் பயன்படுத்தப்பட்டன. அக்கற்கள் கிடைக்காத இடங்களில் வாழ்ந்தோர் அவைகள் கிடைக்கும் பிரதேசங்களில் வாழ்ந்தோரிடமிருந்து இவற்றைப்

பெற்றுக் கொண்டனர். இதனால் இக் காலத்தில் பண்டமாற்று முறை ஆரம்பமானது. இக்காலத்தில் மக்கள் தொகை அதிகமாக இருக்கவில்லை. பழைய கற்காலத்தில் மனிதன் இடத்திற்கு இடம் சென்று உணவினைச் சேகரித்தும் வேட்டையாடியும் உணவைப் பெற்றுக் கொண்டான். பழைய கற்கால இறுதிப் பகுதியில் (பிற்பகுதியில்) சித்திரம் வரைவதற்கும், கற்களைக் கொண்டு உருவங்களை அமைப்பதற்கும் மனிதன் பழகிக் கொண்டான்.



உரு 2.11 பழைய கற்காலத்தின் பிற்பகுதியில் செய்யப்பட்ட பெண்ணின் உருவம். இது மிருகங்களின் எலும்பினால் செய்யப்பட்டது.

## இடைக் கற்காலத்தில் பெற்ற முன்னேற்றம்

உலகின் பல்வேறு பிரதேசங்களில் இடைக் கற்காலம் பல்வேறு காலகட்டத்தில் ஆரம்பமானது. எனினும் பொதுவாக நோக்கும் போது இற்றைக்கு 20,000 இற்கும் 18,000 இற்கும் இடைப்பட்ட காலத்தில் இது ஆரம்பமானது என்ப தனை உறுதிப்படுத்தலாம். பழைய கற் காலத்தைப் போன்றே இக்காலத்திலும் மனிதன் வேட்டையாடியும், உணவை சேகரித்தும் வாழ்க்கை நடாத்தினான். வில், அம்பு என்பனவற்றைப் பயன்படுத்தி வேட்டையாடத் தொடங்கியதும் இக் காலத்திலாகும். காய், கனிகள், இலைகள், கிழங்கு வகைகள் என்பனவற்றைத் தனது உணவாகக் கொள்ள இக்காலத்தில் மனிதன் பழகிக் கொண்டான். பழைய கற்காலத்தைப் போல அலைந்து திரிந்து காலத்தை செலவிடுவதற்குப் பதிலாக இக் காலத்தில் ஒரே இடத்தில் நீண்ட காலம் வாழ்வதற்கு மனிதன் பழகிக் கொண்டான். மரங்களாலும், தடிகளாலும், இலைகுழைகளாலும் வீடுகள் அமைப்பதில் வெற்றி கண்டான். பலவித நிறங்களைப் பயன்படுத்திக் கற்பாறைகளில் சித்திரங்கள் வரைந்தான். பழைய கற்காலத்துடன் ஒப்பிடுகையில் இடைக் கற்கால மனிதன் பாரிய முன்னேற்றம் அடைந்தான் என்பது தெளிவாகிறது.



உரு 2.12 இந்தியாவில் இடைக் கற்காலத்தில் வாழ்ந்த மனிதர்களால் வரையப்பட்ட சித்திரம்



உரு 2.13 இலைகுழைகள், தடிகள் என்பனவற்றைக் கொண்டு தற்காலிக குடிசைகளை அமைக்க இடைக் கற்கால மனிதன் பழகிக் கொண்டான்.

## புதிய கற்காலத்தில் ஏற்பட்ட மாற்றங்கள்

புதிய கற்காலம் இற்றைக்கு 9000 ஆண்டு களுக்கு முன்னர் ஆரம்பமாகியது. அக் காலத்தில் மனிதனால் மிக முக்கியமான நடவடிக்கைகள் பல ஆரம்பிக்கப்பட்டன. அவைகளில் முக்கியமான ஒன்று விவசா யம் செய்யப் பழகிக் கொண்டமையாகும். கோதுமை, பார்லி, குரக்கன் என்பன பயிரிடுதல் இக்காலத்தில் ஆரம்பமாகியது.

மிருகங்களை வளர்த்து அவைகளிலிருந்து பால், முட்டை, இறைச்சி, உரோமம் என்பனவற்றையும் பெற்றனர். ஆதலால் விவசாயத்திற்கு மேலதிகமாக மிருக வளர்ப்பும் வளர்ச்சி அடைந்தது. இக் காலத்தில் முதன் முறையாக உலோகம் கண்டு பிடிக்கப்பட்டதால் கல்லாயுதங் களுக்குப் பதிலாக உலோக ஆயுதங்கள் செய்வதற்கு அவர்களால் முடிந்தது. இதற்கு முன்னர் இடைக் கற்காலத்தில் ஆரம்பமான ஒரே இடத்தில் வாழும் முறை மேலும் வளர்ச்சியடைந்து கிராமங்கள் தோன்ற லாயின. விவசாயத்தின் பொருட்டும், மிருகங்களின் பாதுகாப்பின் பொருட்டும் கடவுளை வழிபடுதல் ஆரம்பமானதும் இக் காலத்திலாகும். எனவே மனிதன் சமய வழிபாடுகளில் முதன் முதல் ஈடுபட முற்பட்டது புதிய கற்காலத்திலாகும்.

மனிதன் நீண்ட காலமாகப் படிப்படியாக வளர்ச்சியடைந்த விதம் இந்தப் பாடத்தில் விளக்கப்பட்டுள்ளது. அந்த நீண்ட காலத்தில் அவனால் செய்யப்பட்டவை இன்றும் எமக்குப் பயனுள்ளதாக உள்ளன.

விவசாயத்திலும், மந்தை வளர்ப்பில் ஈடுபடுதலும், கிராமங்களில் வாழத் தொடங்கியமையும் மனிதனின் முன்னேற் றம் தொடர்பாகப் புதிய கற்காலத்தில் நடைபெற்ற இரு முக்கிய நிகழ்வுகளாகும். பிற்கால நாகரிக வளர்ச்சிக்கு இவை பெருந்துணையாக விளங்கின. நீண்ட காலம் விவசாயத்தில் ஈடுபட்டமையால் ஏராளமான உணவு கிடைத்தமை சிலரை செல்வந்தர் என்ற நிலைக்கு உயர்த்தியது. இதனால் இக்காலத்தில் செல்வந்தர், ஏழை என்ற பாகுபாடு தோன்றியது. செல்வந்தர்களின் பலம் அதிகரித்த துடன் அவர்கள் பிற்காலத்தில் நகர வாழ்க்கைக்குப் பழக்கப்பட்டனர். இது தொடர்பாக ஏனைய பாடங்களில் நீங்கள் கற்கக் கூடியதாக இருக்கும்.

### முக்கிய விடயங்கள்

1. மனிதன் வானர பரம்பரையொன்றி லிருந்து வளர்ச்சியடைந்தான் அது இற்றைக்கு 2.5 மில்லியன் ஆண்டு களுக்கு முன்னராகும்.

2. வானரத்திலிருந்து மனிதன் தோற்றம் பெற்றமை மனித பரிணாமம் எனப்படும்.

3. மனித பரிணாமத்தின் பெரும் பகுதி பெரும் பனியுகம் எனப்படும் அதிகுளிர் காலத்திலேயே நடை பெற்றுள்ளது.

4. சூழலின் பல்வேறு சவால்களுக்கு முகங்கொடுத்து மனிதன் முன்னேற்ற மடைந்தான்.

5. மனிதன் ஏனைய மிருகங்களை விட வேறுபட்டவனாக விளங்கு வதற்குக் காரணம் அவன் பல்வேறு பொருட்களை உற்பத்தி செய்தமை யாகும். அவ்வாறு உற்பத்தி செய்யப் பட்டவை இன்றும் எமக்குப் பயனுள்ளதாக இருக்கின்றன.

6. ஹோமோசேபியன் மனிதனால் ஏறக் குறைய ஓர் இலட்சம் ஆண்டுகளுக்கு முன்னர் மொழி, சங்கீதம், நடனம், சித்திரம் என்பன அறிமுகப்படுத்தப் பட்டன.



**செயற்பாடு - 6**

ஆசிரியரின் அறிவுரைப்படி பின்வரும் அட்டவணையில் காணப்படும் காலக் கட்டத்தில் மனிதன் அடைந்த வெற்றி களைக் கண்டறிந்து குறிப்பிடுக.

| பழைய கற்காலம் | இடைக் கற்காலம் | புதிய கற்காலம் |
|---|---|---|
| | | |

## 2.4 விவசாயத்தின் ஆரம்பம்

மனிதனின் முன்னேற்றம் அல்லது மனித பரிணாமம் பெரிய பனி யுகத்தில் இடம்பெற்றதென்பது நீங்கள் அறிந்த விடயமாகும். அந்தக் காலத்தில் மனிதன் வேட்டையாடியும், இடத்திற்கு இடம் சென்றும் உணவு சேகரிப்பவனாக வாழ்ந்தான். எனினும் இற்றைக்கு 12 000 ஆண்டுகளுக்கு முற்பட்ட காலத்தில் அதுவரை நிலவிய பெரும் பனியுகம் முடிவுறுவது போன்ற அடையாளங்கள் தோன்றின. அக்காலத்தில் குளிர்ந்த கால நிலை வெப்பமடையத் தொடங்கியது. இதனால் தாவரங்கள் செழிப்பாக வளரத் தொடங்கின. மிருகங்களுக்குத் தேவையான உணவு தாராளமாகக் கிடைத்தது. இது மனிதனிலும் மலர்ச்சியை ஏற்படுத்தியது. இந்தப் புதிய காலநிலை ஆரம்பமாகும் யுகம் ஹொலோசின் யுகம் எனப் பெயர் பெற்றது.

இக் காலத்தில் மனிதர்கள் வேட்டையாடு வதற்குப் பதிலாக விவசாயம் செய்யத் தொடங்கினர். உலோக வகைகளைக் கண்டறிந்து அவைகளைத் தனது தேவைக ளுக்குப் பயன்படுத்தினர். மிருகங்களை வேட்டையாடுவதற்குப் பதிலாக அவற்றை வளர்ப்பதில் ஈடுபட்டனர். வெவ்வேறு நாடுகளில் வாழ்ந்தோர் வெவ்வேறு தானியங்களைப் பயிரிட்டனர். பல்வேறு மிருகங்களையும் வளர்த்தனர். எடுத்துக் காட்டாக நெற்செய்கை முதன் முதல் சீனாவில் ஆரம்பமானது. கோதுமை முதன் முதல் மத்தியதரைக்கடல் பிரதேசத்தில் பயிரிடப்பட்டது. இன்று நாம் உணவிற்குப் பயன்படுத்தும் தானிய வகைகளில் சில பின்வரும் இடங்களில் முதன் முதல் பயிரி டப்பட்டன :



உரு 2.14 பழங்கால விவசாயிகள் வாழ்ந்த கிராமமொன்றினை சித்திரக் கலைஞன் சித்திரமாக வரைந்துள்ள விதம்

சோளம் - மத்திய மெக்சிக்கோ (கி.மு. 3000) இற்றைக்கு 5000 ஆண்டுகளுக்கு முன்

கோதுமை - மத்திய தரைக்கடல் (கி.மு. 9000) இற்றைக்கு 11000 ஆண்டுகளுக்கு முன்

நெல் - சீனா (கி.மு. 7000) இற்றைக்கு 9000 ஆண்டுகளுக்கு முன்

அதுவரை அங்குமிங்கும் அலைந்து காலம் கழித்த மனிதன் விவசாயத்தில் ஈடுபட்ட தால் குடும்ப அங்கத்தவர்களுடன் ஒரே இடத்தில் வசிப்பதற்குத் தூண்டப்பட்டான். இதனால் இருப்பிடங்களாக வீடுகளை அமைத்தான். பலர் தங்கள் குடும்பங்க ளுடன் ஒரே இடத்தில் வாழ்ந்ததால் கிராமங்கள் தோற்றம் பெற்றன. முதன் முறையாகக் கிராமங்கள் தோற்றம் பெற்றது கி.மு. 6000 ஆண்டுகளுக்கு முன்னராகும். முதன் முதல் தோற்றம் பெற்ற கிராமங்களின் சிதைவுகள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன.

விவசாயம் ஆரம்பமானதால் உணவின் பொருட்டுப் பொருத்தமான தானிய வகைகளை அறிந்து கொள்ளவும், அவற்றைப் பயிரிடவும் மனிதன் முயற்சி செய்தான். இன்று நாம் எமது அன்றாட வாழ்வில் உணவாகக் கொள்ளும் அவ்விதமான தானிய வகைகள் உலகின் பல்வேறு பிரதேசங்களில் பல்வேறு காலங்களில் பயிரிடப்பட்டவையாகும். இவை தவிர விவசாய நடவடிக்கைகளுக் குத் தேவையான உபகரணங்களைச் செய்வதற்கும் மனிதன் முற்பட்டான். இக்காலத்தில் உலோகங்கள் கண்டு பிடிக் கப்பட்டமையால் உபகரணங்களை சீராக அமைத்துக் கொள்ளக்கூடியதாக இருந்தது. எனினும் உலோகம் கண்டு பிடிக்கப்படுவதற்கு முன்னரே மனிதனால் விவசாய உபகரணங்கள் செய்வதற்கு

முயற்சி மேற்கொள்ளப்பட்டிருந்தது. இவ் வாறு செய்யப்பட்ட பழைய காலத்தைச் சேர்ந்த களிமண்ணால் செய்யப்பட்ட அரிவாள் இஸ்ரேலில் உள்ள கற்குகை ஒன்றில் தொல்பொருள் ஆய்வாளர்களால் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.



உருவம் 2.15 புதிய கற்காலத்தில் மனிதனால் செய்யப்பட்ட அரிவாள். இது களிமண்ணால் செய்யப்பட்டது. கி.மு. 3000 ஆண்டைச் சேர்ந்தது.

ஆரம்ப காலத்தில் கட்டப்பட்ட வீடுகள் மிகவும் எளிமையானவை. களிமண்ணால் கட்டப்பட்ட சுவர்களையும், இலைகுழை களால் வேயப்பட்ட கூரைகளையும் அவை கொண்டிருந்தன. இந்த வீடுகள் மண் குடிசைகள் எனப்பட்டன. சில நாடுகளில் அவ்வாறான வீடுகளின் சுவர்கள் தடிகளால் ஆக்கப்பட்டிருந்தன.

விவசாயம் செய்யக் கற்றுக் கொண்ட மையானது மனிதன் பெற்றுக் கொண்ட மாபெரும் வெற்றியாகும். இடத்திற்கிடம் அலைந்து திரிந்து வேட்டையாடுவதற்குப் பதிலாகக் கிராமங்களில் மனிதன் வாழத் தொடங்கியது விவசாயம் செய்யப் பழகி யமையாலாகும். அறுவடை செய்த பின்னர் கிடைத்த ஓய்வு நேரத்தில் விவசாயம் தவிர்ந்த வேறு செயற்பாடுகளில் ஈடுபட அவனுக்குச்சந்தர்ப்பம் கிடைத்தது. சித்திரம் வரைதல், சிலைகள் அமைத்தல், பாடுதல், ஆடுதல் என்பன இதன் விளைவுகளாகும்.

இவ்வாறு விவசாயத்திலும், மந்தை வளர்ப்பிலும் ஈடுபட்டமையால் மனித னால் நாகரிகத்தைக் கட்டியெழுப்பக் கூடியதாக இருந்தது.

ஆரம்ப உயிரினங்கள் நீரில் தோன்றிப் பின்னர் தரையில் பரவிய விதம் இந்தப் பாடத்தில் விளக்கப்பட்டுள்ளது. தரையில் பல்வேறு உயிரினங்கள் வளர்ச்சி யடைந்தன. தற்காலத்தில் உலகிலுள்ள பறவைகள், மிருகங்கள், ஊர்வன, மீன்கள், சிறு உயிரினங்கள், புழுக்கள் இவை அனைத்தும் அவ்வாறு வளர்ச்சி அடைந்தவைகளாகும். இவ்வாறான பல்வேறு உயிரினங்களில் மனிதனும் ஓர் உயிரினமாவான். வானரமாக இருந்து பின்னர் ஹோமோசேபியன் எனப்படும் அறிவுள்ள மனிதனாக அவன் வளர்ச்சி அடைந்தான்.

நாம் அனைவரும் ஹோமோசேபியன் இனத்தைச் சேர்ந்தவர்களாயினும் இன்று உலகில் சில பிரதேசங்களில் வாழும் மனிதர்களின் முகங்கள் வித்தியாசமான வையாக உள்ளன. ஆபிரிக்காவில் வாழ்வோரின் முகங்கள் சீனாவில் வாழ்வோரின் முகங்களை விட வித்தியா சமானவை. அவ்வாறான வேறுபாடு களுக்கு அமைய ஹோமோ சேபியன் மனிதன் கொக்கசொயிட், நீக்ரொயிட், ஒஸ்ரலொயிட், மொங்கொலொயிட் என்ற நான்கு இனங்களாகப் பிரிக்கப் பட்டுள்ளான். மனிதன் வாழும் சூழல் வேறுபாட்டின் காரணமாகவே இவ் வாறான வேறுபட்ட தோற்றங்கள் காணப் படுகின்றன.

**முக்கிய விடயங்கள்**

1. இற்றைக்கு 12000 ஆண்டுகளுக்கு முன்னர் அதுவரை உலகில் நிலவிய காலநிலை மாற்றமடையத் தொடங் கியது.

2. உலகில் காலநிலை வெப்பமடைந்த தன் காரணமாக விவசாய நடவடிக்கை களை மேற்கொள்வதற்கான சூழல் உருவாகியது.

3. இன்று நாம் உணவாகக் கொள்ளும் தானிய வகைகள் மிகப் பழங்கால மக்களால் பயிரிடப்பட்டன.

4. மனிதன் விவசாய நடவடிக்கைகளில் ஈடுபட்டமையும், கற்களுக்குப் பதிலாக உலோகங்களைப் பயன் படுத்தியமையும் ஒரே காலத்தில் நிகழ்ந்தவையாகும்.




உரு 2.16 உயிரினங்களின் தோற்றம்

உயிரினங்கள் நீரிலேயே தோற்றம் பெற்றன. அது ஒரு கலத்தால் ஆன உயிரியாகும். பிற்காலத்தில் முன்னேற்றமான உயிரினங்கள் தோன்றின. உயிரினங்கள் தரைக்கு வந்ததும் அவை வேகமாக முன்னேறின. இயற்கைக்குரிய அனைத்து உயிரினங்களும் ஒரே இடத்தில் தோன்றின என்பதை விளங்கிக் கொள்வது முக்கியம். எனவே அனைத்து உயிரினங்களும் பாதுகாப்பாக இவ்வுலகில் வாழ உரிமை உண்டு. ஆதலால் சுற்றாடலை நேசித்துப் பாதுகாப்பது எம் அனைவரதும் கடமையாகும்.


ஒஸ்ரலோபிதிகஸ்


ஹோமோ ஹபிலிஸ்


ஹோமோ இரெக்டஸ்


ஹோமோ நியண்டதாலென்சிஸ்


ஹோமோ சேபியன்

உரு 2.17

இரண்டரை மில்லியன் ஆண்டுகளாக மனிதன் முன்னேற்றம் அடைந்தான். வானரத்தி லிருந்து மனிதன் வரையிலான மாற்றத் தின் அடையாளம் மனிதனின் உடலில் தென்படுகிறது. அவற்றில் முகம் முக்கிய இடத்தைப் பெறுகிறது. மனிதனின் மண்டை யோட்டு அமைப்பிற்கேற்ப உருவாக்கப் பட்ட சில தோற்றங்களின் படங்கள் இங்கு காணப்படுகின்றன.




கொக்கசொயிட்


நிக்ரொயிட்


ஒஸ்ரிலொயிட்


மொங்கோலொயிட்

உரு 2.18 பல்வேறு முகங்களையுடைய ஹோமோசேபியன்கள் உலகில் பரவியுள்ள விதம்

# 3. உலகின் புராதன நாகரிகங்கள்

**அறிமுகம்**

ஆரம்பத்தில் வானரமாக இருந்த போதிலும் காலஞ்செல்லச்செல்ல மனிதன் படிப்படியாக முன்னேற்றம் அடைந்தான். வேட்டையாடி இடத் திற்கிடம் அலைந்து திரிந்து சென்று உணவு தேடி தனது வாழ்க்கையை அமைத்துக் கொண்ட அவன் பிற் காலத்தில் விவசாயத்தில் ஈடுபடத் தொடங்கிய முறையை முன்னைய பாடத்தில் கற்பதற்கு உங்களுக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது. நகரங்களை அமைத்து அவற்றில் வாழ ஆரம்பித்த பின்னரே மனித முன்னேற்றத்தின் உயர் நிலையை அவனால் அடைய முடிந்தது. எழுத்துக் கலை, பணப்பரிமாற்றம் போன்ற முக்கிய நிகழ்வுகள் இக் காலத்தில் ஏற்பட்டதால் அது மனித நாகரிக வளர்ச்சி எனப்பட்டது. இப் பாடத்தில் உங்களால் இதனைக் கற்கக் கூடியதாக இருக்கும். இயற்கைக்கு உரிய மிருகமாக மனிதன் விளங்கிய போதிலும் ஏனைய மிருகங்களிலிருந்து அவன் வேறுபடுவது ஏன் என்பதற்கான காரணங்கள் இப்பாடத்தைக் கற்ற பின்னர் உங்களுக்கு விளங்கும்.

## 3.1 கிராமிய சமுதாயம் நகர சமுதாயமாதலும் நாகரிகங்களின் தோற்றமும்

மனிதன் மிகப் பழங்காலந் தொடக்கம் கிராமங்களை அமைத்து அவற்றில் வாழ் வதற்குப் பழகிய முறையை நாங்கள் இதற்கு முன்னுள்ள பாடத்தில் கற்றுக் கொண்டோம். நீண்ட காலமாக அவ்வாறு கிராமத்தில் வாழ்ந்த மனிதர்கள் நாளுக்கு நாள் மேலும் முன்னேறினர். விவசாயம் செய்ததாலும், மந்தை வளர்த்ததாலும் சில கிராமவாசிகள் செல்வந்தர்களாகினர். சில கிராமத்தவர்களுக்கு செழிப்பற்ற, எளிதில் நீரைப் பெறமுடியாத நிலங்களில் பயிர் செய்ய வேண்டிய நிலை ஏற்பட்டது. அவர்களுக்கு நல்ல விளைச்சல் கிடைக் காமையால் வாழ்க்கையை நடாத்திச் செல் வது கடினமானது. அதனால் அவர்கள் கிராமத்தில் ஏழைகளாகக் கணிக்கப் பட்டனர். இதன் மூலம் சமுதாயத்தில் ஏழை, பணக்காரன் என்ற இரண்டு பிரிவுகள் தோற்றம் பெற வழி பிறந்தது.

காலப்போக்கில் செல்வந்தர்களும், அவர் களது உறவினர்களும் கிராமத்தை விட்டுப் பிரிந்து வாழத் தொடங்கினர். மண் குடிசை களுக்குப் பதிலாகக் கல் வீடுகள், நன்கு அமைக்கப்பட்ட பாதைகள், அகழிகள், மதில்கள், சமய வழிபாடுகளுக்குப் பொருத்தமான வழிபாட்டுத் தலங்கள் என்பனவும் உருவாகின. இவற்றை உள்ளடக்கிய இடங்கள் நகரங்கள் எனப் பட்டன. அவ்வாறான நகரங்களில் வாழ ஆரம்பித்த செல்வந்த கிராமவாசிகள் அது முதல் நகரவாசிகள் என்ற பெயரால் அறிமுகமானார்கள். அதன் பின்னர் அவர்கள் விவசாயம் செய்யவுமில்லை. மிருகங்களை வளர்க்கவுமில்லை. அதற் குப் பதிலாகத் தமக்கு சொந்தமான இடங்களில் கிராமவாசிகளைக் கொண்டு விவசாயம் செய்வித்தனர். எனினும் விளைச்சலில் பெரும் பகுதி நகரங்களில் வாழ்ந்தவர்களால் சொந்தமாக்கிக் கொள் ளப்பட்டன.

நாகரிகம் என்பது அவ்வாறான நகரத்தையும் அங்கு வாழ்ந்தோர், அவர்கள் வாழ்ந்த விதம் என்பவற்றையும் கூறுவதாகும். கிராமங்களை விட நகரங்கள் பெரியவை.

பெரிய நகரங்களில் வாழ்ந்தோர் எழுது வதற்குக் கற்றுக் கொண்டனர். நகரை நிர்வாகம் செய்ய ஒரு பிரிவினர் இருந்தனர். நகரங்களில் வாழ்ந்தோர் சமய வழிபாட்டுத் தலங்களை அமைத்தனர். அவர்கள் தூர நாடுகளுடன் வர்த்தகம் செய்தனர். இதனால் நாகரிகம் என்றால் என்ன என்பதனை விளங்கிக் கொள்ளவதற்கு இந்த அடிப்படை இயல்புகளைத் துணையாகக் கொள்ளலாம்.

உலகின் பல்வேறு பிரதேசங்களில் வாழ்ந்த மக்கள் பல்வேறு காலங்களில் தமது நாகரிகங்களை வளர்த்துக் கொண்டனர். இவற்றுள் புராதன நாகரிகங்களாக மொசபத்தேமியா, எகிப்து, சிந்துநதி, சீனா ஆகிய நாகரிகங்கள் விளங்குகின்றன. நாகரிகங்கள் பற்றி நாம் கற்பது முக்கியமானதாகும். ஏனெனில் அங்கு வாழ்ந்தவர்களால் உற்பத்தி செய்யப்பட்ட பலவும் இன்றும் எமது வாழ்க்கைக்குப் பயன் தரக் கூடியவைகளாக உள்ளன.

வட்டத்தில் 360 பாகை உண்டென நாம் கணித பாடத்தில் கற்கின்றோம். நிமிடமொன்றில் 60 வினாடிகள் உண்டென் றும், மணித்தியாலயத்தில் 60 நிமிடங்கள் உண்டென்றும் நாம் அறிவோம். இவ்வாறு எண்ணுவதற்கு எமக்குப் பழக்கியவர்கள் பழைய மொசபத்தேமிய நாகரிகக் கணித வியலாளர்களாகும்.

வெடிமருந்து, திசையறிகருவி, கடதாசி, அச்சியந்திரம் என்பன சீனர்களாலேயே முதன் முதல் அறிமுகம் செய்யப்பட்டன. இவை அனைத்தும் இன்று எமக்கு மிகவும் பயனுள்ளவைகளாக விளங்குகின்றன.

முதன்முதலில் இறப்பர் பந்து மாயா நாகரிகத்துக்கு உரியவர்களாலேயே செய்யப்பட்டது. இறப்பர் எமக்கும் பல வழிகளில் பயன்படுகிறது. நாம் அணியும் காலணிகளில் இறப்பர் பயன் படுத்தப்பட்டுள்ளது போன்று பாரிய விமானங்களின் சில்லுகளுக்கும் இறப்பர் பயன்படுத்தப்படுகிறது.



**செயற்பாடு - 7**

புராதன கால கிராமத்தினதும் நகரத்தினதும் வேறுபாட்டினைத் தெளிவு படுத்தும் வகையில் சித்திரம் ஒன்று வரைக.

## 3.2 நாகரிகப் பரம்பலும் உலகுக்கு உரித்தான கொடையும்

மக்கள் ஆரம்பத்தில் கிராமங்களிலேயே வாழ்ந்தனர். பிற்காலத்திலே நகரங்களை அமைத்து அவற்றில் குடியிருக்கத் தொடங்கினர். நாகரிகம் என்பது நகரமும், அதில் வாழும் குறிப்பிடத்தக்க சனத் தொகையைக் கொண்ட சமூகமும் ஆகும். புராதன நாகரிகங்களில் வாழ்ந்த மக்கள் சமுதாயத்துக்குப் பலவற்றைக் கொடையாக வழங்கியுள்ளனர்.

நாகரிகம் என்றால் என்ன என்பதனை விளங்கிக் கொள்ள வேண்டுமாயின் உலகிலுள்ள சில பழைய நாகரிகங்கள் பற்றிய தகவல்களை அறிதல் வேண்டும். இதன் பொருட்டு மொசபத்தேமியா நாகரிகம், எகிப்திய நாகரிகம், சிந்துநதி நாகரிகம் என்பன பற்றிய சுவையான தகவல்கள் கீழே விபரிக்கப்படுகின்றன.

நாகரிகம் என்பது மனிதனின் முன்னேற் றத்தைத் தெளிவுபடுத்தும் மிக முக்கிய சந்தர்ப்பமாகும். புராதன நாகரிக காலத்தில் வாழ்ந்தோர் புதியவைகளைக் கண்டு பிடித்து இன்று நாம் எளிதாக வாழ்வதற்கு வழிவகுத்த விதத்தைக் கற்றறிந்துக் கொள் வதுடன் புதியனவற்றை உருவாக்கி நாட்டிற்

குப் பணிபுரிய வேண்டும் என்பதையும் நீங்கள் மனதில் கொள்ள வேண்டும்.

### முக்கிய விடயங்கள்

1. மனிதர்கள் ஆரம்பத்தில் வாழ்ந்தது கிராமங்களிலாகும். நகரங்களை நிர்மாணித்துக் கொண்டு அங்கு வாழத் தொடங்கியது பிற்காலத்திலாகும்.
2. நாகரிகம் என்பதனால் கருதப்படுவது, நகரம் மற்றும் அதில் வாழும் குறிப்பிடத்தகு பெருந்தொகையான மக்களைக் கொண்ட ஒரு சமூகமாகும்.
3. புராதன நாகரிகங்களில் வாழ்ந்த மக்கள், பல்வேறு விடயங்களையும் உலகிற்குக் கொடையாக வழங்கி யுள்ளனர்.



**செயற்பாடு - 8**

உமது ஆசிரியரின் அறிவுரைப்படி நாகரிகப் பரம்பலை உலகப் புறவுருவப் படமொன்றில் குறிக்குக.

## மொசப்பத்தேமிய நாகரிகம்






**அறிமுகம்**

மொசப்பத்தேமிய நாகரிகம், யூப்ரடீஸ், தைகிரிஸ் நதிப் பள்ளத்தாக்கில் வளர்ச்சி அடைந்தது. அப்பிரதேசம் தற்போது ஈராக் நாட்டினுள் அடங்குகிறது. மொசபத்தேமியா என்பதன் கருத்து இரு நதிகளுக்கிடையே அமைந்துள்ள நாடு என்பதாகும். மேற்கூறப்பட்ட இரு நதிகளுக்கிடையே மொசபத்தேமியா அமைந்துள்ளது. இந்த நாகரிகம் கி.மு. 3100 - 2900 க்கும் இடைப்பட்ட காலப்பகுதியில் நிலவியது. அதாவது இந்த நாகரிகம் நிலவிய காலப்பகுதி இற்றைக்கு 5000 ஆண்டுகளுக்கு முன்னராகும்.



உரு 3.1 நிலத்தை உழும் விதத்தைக் காட்டும் பழைய மொசப்பத்தேமிய களிமண்தட்டு

மொசப்பத்தேமிய நாகரிகத்தில் அடங்கும் முக்கிய நகரங்களைச் சூழ்ந்து வாழ்ந்த விவசாயிகள் விவசாயத்திலும், மிருக வளர்ப்பிலும் ஈடுபட்டனர். அப் பிரதேசங்களில் மழை குறைவாகக் காணப்பட்டமையால் அவர்கள் ஆற்று நீரைக் கால்வாய்கள் மூலம் கொண்டு சென்று தமது பயிர்ச் செய்கைக்குப் பயன்படுத்தினர். பயிர்ச் செய்கைக்குத் தகுந்த விதத்தில் நிலத்தைத் தயார் செய்தனர். இதன் பொருட்டு மிருகங்களைப் பயன் படுத்தினர். மேலும் உலோகத்தால் செய்யப்பட்ட கலப்பை, கல்லால் செய்யப்பட்ட மண்வெட்டி என்பன பயன்படுத்தப்பட்டன. அங்கு பயிரிடப்பட்டவைகளில் தானியங்கள், பழங்கள், காய்கறிகள் என்பன அடங்கும். கோதுமை பார்லி என்பன அவர்களால் பயிரிடப்பட்ட முக்கிய தானியங்களாகும்.



புராதன ஊர் நகரில் அமைந்துள்ள மொசப்பத்தேமிய சிகுறாத் ஆலயம்.

(அ) இந்தக் கடவுள் குழுவின் தலைவராக திகழ்ந்தவர் 'அனு' என்ற பெயரால் அறிமுகமான கடவுள் ஆவார்.

(ஆ) பூமிக்கு அதிபதியான கடவுளாக 'என்கிகி' என்பவர் கருதப்பட்டார்.

(இ) என்லிலி என்ற பெயரால் வணங்கப்பட்ட கடவுள் காற்றுக்கும் விவசாயத்துக்கும் அதிபதியாகக் கருதப்பட்டார்.

மொசப்பத்தேமிய மக்கள் இயற்கையைத் தெய்வமாகக் கருதி வழிபட்டனர். மழை, காற்று, வெள்ளம் என்பன தெய்வங்களாகக் கருதப்பட்டு வணக்கத்துக்கு உரியவையாகின. அவ்வாறான இயற்கைக்கு உரிய தெய்வங்களைத் திருப்திப்படுத்தவே தாம் வாழ்வதாக அவர்கள் கருதினர்.

மொசப்பத்தேமியாவில் அனைத்து நகரங்களிலும் அந்நகரத்துக்குரிய ஒரு கடவுள் இருந்ததாகக் கூறப்படுகிறது. கடவுளை வழிபட அமைக்கப்பட்ட ஆலயங்கள் 'சிகுறாத்' எனப்பட்டன. அந்த ஆலயங்களில் இருந்த குருமாருக்கு சமூகத்தில் முக்கிய இடம் அளிக்கப்பட்டது.



மொசப்பத்தேமிய நாகரிகத்தைச் சேர்ந்த கப்பல்

ஆறுகளில் பயணம் செய்யும் சிறு கப்பல்களில் வர்த்தகம் செய்வதில் மொசபத்தேமிய மக்கள் திறமையுடையவர்களாயிருந்தனர். உணவு, பானவகைகளையும், ஆடை ஆபரண வகைகளையும் கப்பல்களில் எடுத்துச் சென்றனர்.

மொசப்பத்தேமியாவின் வடபகுதியில் வாழ்ந்த அசீரியர்களும் சிறந்த வர்த்தகர்களாவர். அவர்கள் தரை மார்க்கமாகவே வர்த்தகத்தில் ஈடுபட்டனர். வர்த்தகப் பொருள்களைக் கழுதை மீது ஏற்றிக் கொண்டு செல்வதை அவர்கள் பழக்கமாகக் கொண்டிருந்தனர். அவை 'தவலம்' என அழைக்கப்பட்டன.



மொசப்பத்தேமிய உயர்குடி ஆண், பெண் தோற்றம்

**மொசப்பத்தேமிய சமூகம்**

மொசபத்தேமிய சமூகம் நான்கு பிரிவுகளைக் கொண்டிருந்தது.

(1) குருமார்

(2) உயர்குடி மக்கள்

(3) கீழ்மட்ட மக்கள்

(4) அடிமைகள்

என்பனவே அவைகளாகும். மொசபத் தேமிய சமுதாயத்தில் குருமார் அதிகாரம் படைத்தவர்களாக இருந்தனர். அவர்கள் சமய செயற்பாடுகளுக்கு மேலதிகமாக வைத்தியர்களாகவும் செயற்பட்டனர். குருமார் தலை முடியை மழித்தனர். செம்மறி ஆட்டின் தோலால் செய்யப் பட்ட உடைகளை அணிந்தனர். உயர்குடியைச் சேர்ந்த ஆண்களும், பெண்களும் தங்கத்தாலான பல்வேறு ஆபரணங்களை அணிந்தனர். ஆண்கள் தலைமயிரை நீளமாக வளர்த்தனர். அவர்களுக்கு நீண்ட தாடியும் இருந்தது. பெண்கள் ஒரு தோளை மூடி உடை அணிந்தனர். அவர்களும் தலை மயிரை நீளமாக வளர்த்தனர்.

கீழ்மட்டத்தைச் சேர்ந்தவர்கள் சொகு சான வாழ்க்கை வாழவில்லை. எனினும் அவர்கள் தமது வீடுகளில் சாதாரண வாழ்க்கை வாழ்ந்தனர். அவர்கள் கஷ்டப்பட்டு வேலை செய்தனர். அதன் பொருட்டு அவர்களுக்கு சம்பளம் கிடைத்தது. அவர்களது உடையும், ஆபரணமும் பெறுமதி வாய்ந்தனவாக இருக்கவில்லை.



உரு 3.2 மொசப்பத்தேமிய எழுத்துத் தொகுதி

உலகில் மிகப்பழைய எழுத்துக்கலை மொசபத்தேமியாவிலேயே ஆரம்ப மானது. இந்த எழுத்து 'ஆப்பு' எழுத்து எனப்பட்டது. இந்த எழுத்துக்களை எழுதுவதற்குக் களிமண்ணால் செய்யப்பட்ட தட் டுக்கள் பயன்படுத்தப்பட்டன. ஈர மான களிமண் தட்டுக்களின் மீது கூராக்கப்பட்ட குச்சி ஒன்றினைக் கொண்டு அந்த எழுத்தினை எழுதினார்கள். ஆரம்பத்தில் உருவம் வரைதல் போன்று ஆரம்பமான மொசபத்தேமிய எழுத்து முறை பிற் காலத்தில் எழுத்துத் தொகுதியாக முன்னேற்றம் அடைந்தது.

இந்தக் களிமண் தட்டுக்களில் பல விடயங்கள் எழுதப்பட்டுள்ளன. வர்த் தகம் தொடர்பான விளக்கங்களும் அவற்றில் முக்கியத்துவம் பெறுகின்றன.

மொசபத்தேமியாவில் வாழ்ந்த கில்க மேஷ் என்பவரால் ஆப்பு வடிவான எழுத்துக்களால் எழுதப்பட்ட வீரக்கதை உலகின் மிகப் பழைமை வாய்ந்த இலக்கிய நூலாகக் கருதப்படுகிறது. களிமண் தட்டின் மீது எழுதுதல் கடினமாக இருந்த போதிலும் மொசபத்தேமிய மக்கள் அதனை திறமையாகச் செய் துள்ளனர். களிமண் தட்டின் மீது எழுதப்பட்ட சில கடிதங்களை நிறைவு செய்து உறைகளில் இட்டுக் குறிப்பிட்ட நபருக்கு அனுப்புவதற்கு வேண்டிய நடவடிக்கைகள் அவர்களால் மேற் கொள்ளப்பட்டன. மொசபத்தேமி யாவை ஆட்சி செய்த ஹமுராபி என்ற ஆட்சியாளரால் தயாரிக்கப்பட்ட சட்டக் கோவை உள்ளடங்கிய நூல் ஒன்றும் உள்ளது. அது உலகின் மிகப் பழைய சட்ட நூலாகும்.

## சிந்துநதி நாகரிகம்






**அறிமுகம்**

சிந்துநதி நாகரிகம் இந்தியாவின் வட மேற்குப் பகுதியினூடாகப் பாய்ந்தோடும் சிந்துநதியை மைய மாகக் கொண்டு எழுச்சி பெற்ற தாகும். தற்போது இப் பிரதேசங்கள் ஆப்கானிஸ்தானுக்கும், பாகிஸ்தானுக் கும், இந்தியாவின் வடமேற்குப் பிரதேசத்திற்கும் உரியதாக உள்ளன. சிந்துநதி நாகரிகம் கி.மு. 2600 - 1990 இற்கும் இடைப்பட்ட காலப்பகுதியில் நிலவியது. மொகஞ்சதாரோ, ஹரப்பா என்பனவே அங்கு இருந்த பிரதான இரு நகரங்களாகும். இந்நாகரிகம் உச்சக் கட்டத்தில் இருந்த காலத்தில் இதற்கு உட்பட்ட அனைத்து நகரங்களிலும் மக்கள் தொகை ஐந்து மில்லியனாக இருந்தது.

சிந்துநதி நாகரிக மக்கள் செம்பு, வெண்கலம், ஈயம் மற்றும் வெள்ளீயம் (Tin) போன்ற உலோகங்களை உபயோகித்தனர். அவர்கள் சுட்ட செங்கற்களைக் கொண்டு கட்டப்பட்ட வீடுகளில் வாழ்ந்தனர். அந்த வீடுகளில் மிகவும் உயர் நிலையிலான நீர்க்குழாய்த் தொகுதிகள் இருந்தன. நகரங்கள் நன்கு திட்டமிட்டு அமைக்கப்பட்டிருந்தன. இம் மக்கள் எழுத்துக்களாகப் பயன்படுத் தக்கூடிய குறியீட்டுத் தொகுதியையும் உருவாக்கினர்.



சிந்துநதி நாகரிகத்திற்கு உட்பட்ட முக்கிய நகரங்கள் நான்கு இருந்தன. மொகஞ்ச தாரோ, ஹரப்பா, டொலவீர், கலிபன்கன் என்பனவே அவைகளாகும். இந்த நகரங் கள் அனைத்தும் நன்கு திட்டமிடப்பட்டு அமைக்கப் பட்டவையாகும். இந்தப் படத்தில் காணப்படுவது தொல்பொருள் அகழ்வுகளின் போது கண்டு பிடிக்கப்பட்ட அவ்வாறான நகரமொன்றின் சிதைவுகளாகும்.



சிந்துநதிப் பிரதேசத்தில் கண்டெடுக்கப்பட்ட இந்த உருவம் அந்த நாகரிகத்தில் வாழ்ந்த மதகுரு ஒருவரின் உருவம் என நம்பப்படுகிறது. நெற்றியில் உள்ள பட்டம் அவர் உயர் நிலையிலிருந்த ஒருவர் என்பதனை வெளிப்படுத்தும் அடையாளமாகும். கண் சற்று மூடி இருப்பதானது அவர் அமைதியாகத் தியானத்தில் இருப்பதைக் காட்டுகிறது. இதன்மூலம் அவர் ஒரு மதகுரு என்பது மேலும் உறுதிப்படுத்தப்படுகிறது.

உரு 3.3 மதகுரு உருவம்

சிந்துநதி நாகரிக காலத்தில் நகரங்களில் வாழ்ந்த மக்கள் சிறந்த ஒழுங்கு முறையில் அமைக்கப்பட்ட கிணறு, வடிகால்கள், அழுக்குகளை வெளியேற்றும் குழாய்த் தொகுதி என்பனவற்றை உபயோகித்தனர். அவ்வாறான நகரமொன்றில் தனிப்பட்ட உபயோகத்தின் பொருட்டுக் கட்டப்பட்ட கிணறு ஒன்றே இப்படத்தில் காட்டப்படுகிறது.



உரு 3.4 கிணறு



சிந்துநதி நாகரிகத்தைச் சேர்ந்த பழைய நகரங்களில் காணப்படும் நன்கு அமைக்கப்பட்ட வீதிகள் போக்குவரத்து அடைந்திருந்த முன்னேற்றத்திற்கு சிறந்த சான்றாகும். அவ்வாறு பயன்படுத்தப்பட்ட வண்டி யொன்றின் உருவமே இங்கு காணப்படுகிறது. விளையாட்டின் பொருட்டு இது பயன்படுத்தப்பட்டதாக இருக்கலாம்.

உரு 3.5 விளையாட்டு மண் வண்டி



உரு 3.6 இலச்சினை

சிந்துவெளி நாகரிகத்திற்கு உரிய இலச்சினை ஒன்றே இந்தப் படத்தில் காணப்படுகிறது. படத்தின் மேல் பகுதியில் சில அடையாளங்கள்காணப்படுகின்றன. அவை ஏதேனும் கருத்தினை வெளிப்படுத்தப் பயன்படுத்திய சிறப்பான எழுத்துக்கள் எனப் பலர் கருதுகின்றனர். படத்தில் காணப்படும் மிருகம் காண்டாமிருகம் (ரைனோசிரஸ்) என்பதில் சந்தேகமில்லை. சிந்துநதி நாகரிகத்திற்குரிய இலச்சினைகளில் என்ன எழுதப்பட்டுள்ளன என்பதனை இதுவரை எவராலும் அறிந்து கொள்ள முடியவில்லை.

## எகிப்திய நாகரிகம்






### அறிமுகம்

ஆபிரிக்காக் கண்டத்தினூடாகப் பாய்ந்து செல்லும் நைல்நதியின் கீழ்ப் பகுதியைச் சேர்ந்த சமவெளிப் பிரதேசத்தில் இந்த நாகரிகம் கி.மு. 3150 ஆம் ஆண்டு அளவில் நிலவியது. இப் பிரதேசம் தற்போது எகிப்து நாட்டினுள் அடங்குவதால் எகிப்திய நாகரிகம் என அழைக்கப்படுகிறது. நீண்ட காலமாகப் பாராவோ எனப் படும் பரம்பரையைச் சேர்ந்த அரச ர்களால் இந்தப் பகுதி ஆட்சி செய்யப்பட்டது. எகிப்திய நாகரிக மக்களின் பிரதான சீவனோபாயம் விவசாயமாகும். இதனால் நீர்ப்பாச னத் தொகுதி ஒன்றை அமைப்பதில் அவர்கள் சிறந்து விளங்கினர். எகிப்திய நாகரிகத்திலிருந்து உலகிற்குக் கிடைத்த சிறந்த கொடை பிரமிட்டுக்கள் ஆகும். பாராவோ மன்னர்களின் சடலங்கள் பிரமிட்டுக்களில் அடக்கம் செய்யப் பட்டன. இந்த நாகரிகத்திலிருந்து பெறப் படும் மற்றொரு முக்கிய பங்களிப்பு எழுத்துத் தொகுதியாகும். பல்வேறுபட்ட மிருகங்களினதும், பொருள்களினதும் உருவங்களைக் கொண்டு நிர்மாணிக்கப் பட்ட இந்த எழுத்துக்கள் எகிப்திய சித்திர எழுத்துக்கள் எனப் பெயர் பெறுகின்றன.



உரு 3.7 பிரமிட்டு

இந்தப் படத்தில் காணப்படுவது எகிப்தின் தலைநகரான கெய்ரோ நகரிலிருந்து சற்று தூரத்தில் அமைந்துள்ள கீசா என்ற இடத்தில் அமைக்கப்பட்டுள்ள பிரமிட்டுகளாகும். இவற்றினுள்ளே பாராவோ (பார்வோன்) மன்னர்களதும் அவர்களது மனைவிமாரதும் சடலங்கள் வைக்கப்பட்டுள்ளன. எகிப்தின் மிகப்பழைய பிரமிட்டுக்கள் கி.மு. 2630 - 2611 இற்கும் இடைப்பட்ட காலத்தில் அமைக்கப்பட்டவைகளாகும். கீசாவில் உள்ள பிரமிட் உலகின் ஏழு அதிசயங்களில் ஒன்றாக கருதப்படுகிறது.

நெபநெபவுட்டேன் நெபட்டிட்டி என்ற அரசி பாராவோ (பார்வோன்) மன்னனான அகனெட்டான் (அக்ஹெனதன்) என்பவரின் மனைவியாவாள். அவள் கி.மு. 1370 - 1330 இற்கும் இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்தாள். இந்த உருவின் மேற்பாகத்தைக் கொண்ட உருவம் அவள் உயிரோடு இருக்கும்போதே நிர்மாணிக்கப் பட்டதாகக் கருதப்படுகிறது. அகனெட்டான் (அக்ஹெனதன்) மன்னன் இறந்த பின்னர் சிறிது காலம் அவளால் எகிப்து ஆட்சி செய்யப்பட்டது. இந்த அரசி அக்காலத்தில் வாழ்ந்த பேரழகி எனக் கருதப்படுகிறார்.



உரு 3.8 நெபநெபவுட்டேன் அரசி



உரு 3.9 எகிப்திய சித்திர எழுத்துக்கள்

எகிப்திய நாகரிகக் காலத்தைச் சேர்ந்த கல்விமான்கள், எழுதுவ தற்குப் பயன்படக்கூடிய பல குறியீடுகளை உருவாக்கினர். அன்றாட வாழ்வுடன் தொடர் புடைய பல்வேறு பொருள்கள், தாங்கள் காண்பவை, தம்முடன் தொடர்புடையவை என்பனவற்றை உருவமாக வடித்து அந்தக் குறியீடு களைத் தயாரித்தனர். இவை எகிப்திய சித்திர எழுத்துக்கள் எனப் பட்டன.



இது மன்னனொருவன் பறவைகளைத் துரத்திச் செல்லும் விதத்திலான பழைய எகிப்திய சித்திரம் ஆகும். சூழல் மிக அழகாக இதில் சித்திரிக்கப்பட்டுள்ளது.

உரு 3.10 எகிப்திய சித்திரம்

இது எகிப்திய நாகரிகத்திற்குரிய செல்வந்தர் ஒருவரின் 'மம்மி' வைக்கப்பட்டிருக்கும் விதத்தைக் காட்டும் படமாகும். இறந்த உடலைப் நீண்ட காலம் பேணி வைத்திருக்கக் கூடிய 'மம்மி' முறையை எகிப்திய நாகரிக மக்களே உலகிற்கு அறிமுகம் செய்து வைத்தனர்.



உரு 3.11 செல்வந்தர் ஒருவரின் மம்மி



இது கி. மு. 1332 - 1323 இற்கும் இடைப்பட்ட காலத்தில் இருந்த துட்டன்காமன் (டூடன் கான்) என்ற மன்னனின் மம்மியின் முகத்தின் மீது வைக்கப்பட்டிருந்த தங்கத்திலான முகமூடியாகும்.

உரு 3.12 துட்டன்காமன் மன்னனின் தங்க முகமூடி கொண்ட மம்மி முகம்



**செயற்பாடு - 9**

நாகரிகங்கள் தொடர்பாகப் பாடநூலிலுள்ள படங்களின் விளக்கங்களை வாசித்துப் பின்வரும் அட்டவணையைப் பூர்த்தி செய்க.

| அ. சின்னங்கள் | ஆ. நாகரிகம் |
|---|---|
| விளையாட்டுக்களில் மண் வண்டி | |
| ஆப்பு வடிவிலான எழுத்து | |
| பிரமிட் | |
| நெபநெபவுட்டேன் அரசி | |
| மிருக அடையாளத்துடனான களிமண் இலச்சினை | |
| துட்டன்காமன் (டூடன் கான்) மன்னனின் முகத்தில் தங்கத்தினாலான முகமூடி | |

# 4. இலங்கையில் குடியேற்றங்கள் நிறுவப்படல்

**அறிமுகம்**

எந்த ஒரு நாட்டிலும் அல்லது பிரதேசத்திலும் மக்கள் முதன்முதல் வந்து குடியேறுவது குடியேற்றம் எனப்படும். தீவாகிய எமது நாட்டில் இற்றைக்கு ஒரு இலட்சத்து இருபத்தையாயிரம் ஆண்டுகளுக்கு முன் மக்கள் வாழ்ந்துள்ளார்கள் என தொல்லியல் ஆய்வுகள் உறுதிப்படுத்துகின்றன. எமது நாட்டிற்கு வந்து குடியேறியவர்கள் இந் நாட்டை எவ்வாறு விருத்தியடையச் செய்தார்கள் என்பதை இப்பாடத்தின் மூலம் நீங்கள் அறிந்து கொள்வீர்கள்.

## 4.1 இலங்கையின் ஆரம்பக் குடியேற்றங்கள்

முதன் முதல் இந்நாட்டில் வாழ்ந்த வர்கள் வேட்டையாடி வாழ்க்கை நடாத்திய மக்களாவர். அவர்கள் வேட்டையாடுதலுக்கு மேலதிகமாக அங்குமிங்கும் அலைந்து திரிந்து தமது உணவிற்குத் தேவையான வைகளை சேகரித்தனர். மழை காலத்தில் அவர்கள் கற்குகைகளில் தங்குவதை விரும்பினர். மழை இல்லாத காலங்களில் மிருகங்கள் நடமாடும் திறந்த வெளிகளில் வாழ்ந்தனர். அவ்வாறு அவர்கள் வாழ்ந்தது மிருகங்களை வேட்டையாடுவதற்கு இலகுவாக இருந்தமையினாலாகும்.

அன்றாட தேவைகளுக்கு அவர்கள் கற்களால் செய்யப்பட்ட உபகரணங்களைப் பயன்படுத்தினர். அவை கல்லாயுதங்கள் எனப்பட்டன. இவை தவிர மிருகங்களின் எலும்பினாலும், தடிகளினாலும் செய்யப்பட்ட உபகரணங்களையும் அவர்கள் பயன்படுத்தினர்.



உரு 4.1 வேட்டையுகத்தில் மனிதன் அங்குமிங்கும் அலைந்து உணவு சேகரித்தமையைக் காட்டும் படம்.

காடுகளில் வளரும் காட்டுப் பலா, காட்டு வாழை, ஒரு வகை கிழங்கு என்பனவற்றை அவர்கள் உணவாகக் கொண்டனர். மான், முயல், மரஅணில், முள்ளம்பன்றி, ஆமை, உடும்பு, நத்தை என்பன அவர்கள் உணவுக்கென வேட்டையாடிய



படம் 4.2 இயற்கையாக வளரும் கிழங்கு வகைகளை உணவாகக் கொள்ளவும் வேட்டை யுகத்தில் மனிதன் பழகியிருந்தமை.



படம் 4.3 பாகியன்கல கற்குகையில் கண்டெடுக்கப் பட்ட சிப்பியைத் துளைத்து செய்யப்பட்ட கழுத்தில் அணியும் அட்டியல்.

(படம் : தொல்பொருள் திணைக்கள அனுசரணை)

உயிரினங்களில் சிலவாகும். அவர்கள் எமது நாட்டின் பல பிரதேசங்களிலும் வாழ்ந்தனர்.



படம் 4.4 வேட்டை யுகத்தில் மனிதன் வசித்ததாகக் கருதப்படும் கித்துல்கலை குகை.

இன்று நாம் ஆபரணங்கள் அணிவதை விரும்புவது போன்று அக்காலத்தில் வாழ்ந்தவர்களும் சில சந்தர்ப்பங்களில் ஆபரணங்கள் அணிந்தனர். கழுத்தை அலங்கரிக்க உபயோகித்த சுறா மீனின் பல்லினாலான மணியொன்று கற்குகையொன்றிலிருந்து கண்டு பிடிக்கப் பட்டுள்ளது. எனினும் அவர்களது உடை எவ்வாறானது என்பது இதுவரை அறியப்படவில்லை.

அக்கால மக்கள் இறந்த தமது உறவினர் களைக் கற்குகைகளினுள்ளே புதைத்தனர். அவ்வாறு புதைக்கப்பட்டவர்களின் எலும்புகள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. அவைகள் குழியினுள் வளைக்கப்பட்டு புதைக்கப்பட்டுள்ளன. சில எலும்புக் கூடுகளில் சிவப்பு நிறம் பூசப்பட்டுள்ளது. அந்த நிறம் புவியில் உள்ள இயற்கைக் கல் ஒன்றைக் கொண்டே தயாரிக்கப்பட் டுள்ளது. இவற்றைக் கொண்டு அக்கால மக்கள் இறந்தவர்களுக்காக மரணச் சடங்குகளை நடத்தியமையை அறியக் கூடியதாக உள்ளது.

கற்களால் செய்யப்பட்ட ஆயுதங்களை அதிகமாகப் பயன்படுத்தியதால் எமது நாட்டில் மக்கள் வாழ்ந்த ஆரம்ப யுகம் கற்காலம் எனப்படுகிறது.

கற்கால மனிதர்களிடத்தில் சிங்கள, தமிழ், முஸ்லிம் எனும் வேறுபாடுகள் காணப்படவில்லை. அவ்வாறான வேற்றுமைகள் எம்மிடையே ஏற்பட்டது பிற்காலத்திலாகும்.

### முக்கிய விடயங்கள்

1. எமது நாட்டில் இற்றைக்கு ஒரு இலட்சத்து இருபத்தையாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் மக்கள் வாழ்ந்துள்ளார்கள்.
2. இந் நாட்டில் குடியேறியவர்கள் தூர நாட்டிலிருந்து வந்தவர்கள். அவர்கள் எமது நாட்டின் பல பாகங்களிலும் வாழ்ந்தனர்.
3. அவர்கள் வேட்டையாடியும், உண வுக்குத் தேவையான ஏனையவற்றை சேகரித்தும் வாழ்ந்தனர்.
4. ஆபரணங்களை அணியவும், இறந்த வர்களுக்கு மரியாதை செய்யவும் அவர்கள் அறிந்திருந்தனர்.
5. அன்றாட தேவைகளுக்காக அவர்கள் பயன்படுத்திய உபகரணங்கள் கல் லாலும் தடிகளாலும் மிருகங்களின் எலும்புகளாலும் செய்யப்பட்டவை யாகும். அக்காலம் கற்காலம் எனப் பட்டது.
6. கற்கால மனிதர்கள் மத ரீதியில் பிரிந்து காணப்படவில்லை.



### குழு வேலை

1. சுற்றாடலிலிருந்து படிகக்கற்கள் (திருவானைக்கல்) சிலவற்றைத் தேடிக்கொள்ளவும் அக்கற்களின் மூலம் எத்தகைய பயன்களை பெறலாம் என்பதைக் கலந்து ரையாடுக.
2. ஆசிரியருடன் கற்குகையொன் றைப் பார்வையிடச் சென்று அங்கு நீங்கள் வசிக்க நேரிட்டால் முகங் கொடுக்க வேண்டிய சவால்களை அட்டவணைப் படுத்துக.



### செயற்பாடு - 10

1. கற்காலத்தில் வாழ்ந்த ஒருவ ரைக் கற்பனை செய்து, அவரது அன்றாட வாழ்வின் நிகழ்வு ஒன்றினை சித்திரமாக வரைக.
2. நிறக் கல்லொன்றை சுற்றாடலில் தேடி அதிலிருந்து நிறமொன்றை தயாரித்து அதனைப் பூசும் முறையினைப் பார்த்து கற்கால மனிதன் எவ்வாறு நிறத்தைத் தயாரித்தான் என்பது பற்றி எழுதுக.

## 4.2 விஜயனின் வருகையும் குடியேற்றங்களின் பரம்பலும்

**அறிமுகம்**

கற்காலம் ஓர் இலட்சம் ஆண்டுகளுக்கு மேலாக நிலவியது. எனினும் இற்றைக்கு 5000 - 4500 ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்தவர்கள் மிகவும் முன்னேற்றமடைந்திருந்தனர். சட்டி பானைகள் செய்யத் தொடங்கியமை கல்லாயுதங்களுக்குப் பதிலாக இரும் பினை உபயோகிக்கத் தொடங்கியமை என்பன இந்த முன்னேற்றத்தின் சிறப்பான இயல்பாகும். கி.மு. 544 ஆம் ஆண்டு விஜயன் உள்ளிட்ட குழுவினர் இந்நாட்டிற்கு வந்த காலத்தில் இவ்வாறு முன்னேற்றமடைந்த பிரிவினரே இங்கு வாழ்ந்தனர். இந்தப் பகுதியில் நீங்கள் இவை பற்றிய விவரங்களை அறிந்து கொள்ளலாம்.

விவசாயத்திற்குப் பழக்கப்பட்ட இந் நாட்டின் பழங்கால மனிதர்கள், மலைப் பிரதேசங்களிலேயே வாழ்ந்தனர். இது இற்றைக்கு 4400 (கி.மு. 2400) ஆண்டு களுக்கு முன்னராகும். மலைப் பிரதே சங்களில் இடையிடையே காணப்பட்ட சமவெளிகளில் அவர்கள் வாழ்ந்தனர். அவ்வாறான சமவெளிகள் பீடபூமி எனப் படும். அவர்கள் வாழ்ந்த இடங்களிலிருந்து தானியங்கள் அரைக்கும் கற்கள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. அவை அம்மக்கள் தானியங்களை உணவாகக் கொண்டமைக் கான சான்றாகும். இயற்கையாக வளரும் புல் வகைகளின் விதைகளை அவர்கள் உணவாகக் கொண்டிருக்கலாம். எனினும் அந்தத் தானியங்கள் எவையென இதுவரை கண்டுபிடிக்கப்படவில்லை. அவர்கள் மட்பாண்டங்கள் செய்தனர். அக்காலத்தில் இரும்பினை உபயோகிக்க கற்றுக் கொண்டமையே அவர்களது பெரும் சாதனையாக விளங்குகிறது. தரையில் உள்ள இரும்புடனான கற்களை சூடாக்கி இரும்பினைத் தயாரித்தனர். அன்றாட வாழ்க்கைத் தேவையின் பொருட்டு அவர்கள் கல்லாயுதங்களையும் சிறிய அளவில் உபயோகித்தனர். இரும்பு உபகரணங்களிலுள்ள வலுவான தன்மை யினால் அவர்கள் தமது வேலைகளை முன்பை விட சிறப்பாக செய்யக் கூடியதாக இருந்தது.



உரு 4.5 இலங்கையின் மலைநாட்டுப் பகுதியில் ஆரம்ப காலத்தில் வாழ்ந்த விவசாயிகள் பயன்படுத்திய அம்மி மற்றும் உபகரணங்கள்.

அக்கால மக்கள் மண் குடிசைகளில் வாழ்ந்தனர். அந்த வீடுகளின் கூரை இலைகுழைகளால் வேயப்பட்டிருந்தன. கூரையை வேய்வதற்கு மானா, இலுக் போன்ற புற்களைக் காய வைத்துப் பயன் படுத்தியிருக்கலாம். தற்பொழுதும் அப்பிரதேசத்தில் சேனைப்பயிர் செய்வோர் தமது சேனைப்பயிர்களுக்கு நிழல் வழங்கும் பொருட்டு காயவைக்கப்பட்ட மானா, இலுக் என்பனவற்றின் புற்களைப் பயன்படுத்துகின்றனர்.

அக்கால மக்கள் இறந்த தம் உறவினர்களுக் குக் கல்லறை கட்டினர். இறந்த உடலை ஒரு இடத்தில் புதைத்துக் குறிப்பிட்ட காலத்தின் பின்னர் எலும்புகளை வெளியில் எடுத்துத் தகனம் செய்தனர். பின்னர் அச் சாம்பலை

மண்ணால் செய்யப்பட்ட பானையில் வைத்து, மண்ணால் செய்யப்பட்ட கல்லறையில் அடக்கம் செய்தனர். இவர்கள் ஆரம்ப காலத்தில் மலைப்பிரதேசத்தில் வாழ்ந்தனர். பின்னர் அடிவாரத்தில் உள்ள சமவெளி நோக்கி நகர்ந்தனர். படிப்படியே முன்னேற்றத்தை நோக்கிப் பயணித்த அவர்களுக்கு முறையான தொழில்நுட்பம் இருந்தது என்பது அவர்களால் செய்யப்பட்ட பாத்திரங்கள், இரும்பு ஆயுதங்கள், கட்டப்பட்ட வீடுகள் என்பனவற்றிலிருந்து தெளிவாகிறது.

## விஜயனின் வருகை

விஜயன் என்ற பெயரால் அறிமுகமான இளவரசனும், அவனது குழுவினரான எழுநூறு பேரும் கி.மு. 544 ஆம் ஆண்டளவில் இந்தியாவிலிருந்து வந்து இலங்கையில் குடியேறினர் என்று வரலாற்றில் குறிப்பிடப்பட்டுள்ளது. எமது நாட்டின் வரலாற்றைக் கற்பதற்குத் துணை புரியும் மகாவம்சம் என்ற நூலில் இது தெளிவாக விளக்கப்பட்டுள்ளது. இவர்கள் தம்பபண்ணி எனப்படும் இடத்தில் வந்து இறங்கினர். இது இலங்கையின் மேற்குக் கரையோரத்தில் அமைந்துள்ள இடமாகும்.



படம் : 4.6 - விஜயன் குவேனியை சந்தித்தல்

விஜயன் இலங்கைக்கு வரும் பொழுது இயக்கர், நாகர், தேவர் போன்ற மக்கள் குலத்தவர் இங்கு வாழ்ந்தாக நம்பப்படுகின்றது. இயக்கர் குலத்தைச் சேர்ந்த குவேனி என்ற பெண் விஜயனின் குழுவினரை மாய சக்தியின் மூலம் பிடித்து ஒழித்து வைத்தாள். தன்னுடன்வந்தவர்களைத் தேடிச் சென்ற விஜயன் குவேனியை சந்தித்தான். அவ் வேளையில் அவள் நூல் நூற்றுக் கொண்டிருந்தாள் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

குவேனி இயக்கர் குலத்தைச் சேர்ந்த பெண் என்பதை அறிந்து கொண்ட விஜயன் தனது வாளை உயர்த்தி அவளைப் பயமுறுத்தி ஒழித்து வைத்திருந்த தனது குழுவினரை மீளப் பெற்றுக் கொண்டான். பின்னர் விஜயன் குவேனியைத் திருமணம் செய்து கொண்டான். இவர்களுக்கு ஒரு ஆண் குழந்தையும் ஒரு பெண் குழந்தையும் பிறந்தனர். ஜீவஹத்த, திசால என்பது அவர்களின் பெயர்களாகும்.

இயக்கர்களுக்கு உரிய நகரங்கள் இரண்டு இருந்தன. சிறிசவத்து, லங்காபுர என்பனவே அவைகளாகும். சிறிசவத்து நகரில் விழாவொன்று நடந்தபோது இரவில் அனைத்து இயக்கர்களையும் அழித்து இலங்கையின் அரசனாவதற்குக் குவேனி விஜயனுக்கு உதவினாள்.

இயக்கர்களை அழித்த பின்னர் விஜயன் குவேனியைக் கைவிட்டு, சத்திரிய குல மரபிற்கு அமைவாக தென் இந்தியாவில் இருந்து பாண்டிய இளவரசியை வரவழைத்து அவளைத் திருமணம் செய்து கொண்டான்.

விஜயனுடன் வந்த குழுவினர் பல்வேறு இடங்களிலும் குடியேறினர். மல்வத்து ஓயா, கலா ஓயா நதிக் கரைகளை அண்டிய பகுதிகளில் அவர்கள் குடியேற்றங்களை அமைத்துக் கொண்டதாக மகாவம்சம் குறிப்பிடுகின்றது. உபதிஸ்ஸ என்ற அமைச்சனால் உபதிஸ்ஸகமவும், அநுராத என்ற அமைச்சனால் அநுராதகமவும், உருவெல என்ற அமைச்சனால் உருவெலகமவும் அமைக்கப்பட்டன.

விஜயன் உள்ளிட்ட குழுவினர் ஆரிய இனத்தைச் சேர்ந்தவர்களென மகாவம்சம் குறிப்பிடுகிறது. இவர்களின் வருகையின் பின்னர் இந்திய சமுதாயத்தில் அக் காலத்தில் நிலவிய பழக்கவழக்கங்கள் இந்நாட்டிலும் பரவத் தொடங்கின.

**முக்கிய விடயங்கள்**

1. எமது நாட்டில் கற்காலத்தில் வாழ்ந்த மக்கள் பின்னர் விவசாயம் செய்யப் பழகிக் கொண்டனர்.

2. நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் அவர்கள் இரும்பைக் கண்டு பிடித்தனர். இது தவிர அவர்கள் மட்பாண்டங்கள் செய்யவும், வீடுகள் கட்டவும் அறிந்திருந்தனர்.

3. இறந்த உறவினர்களுக்காக மரணச் சடங்குகள் நடாத்தியதுடன் கல்லறைகளும் கட்டினர்.

4. இலங்கையில் குடியேற்றங்கள் அமைக்கப்பட்டமை தொடர்பான கதை மகாவம்சத்தில் குறிப்பிடப் பட்டுள்ளது. இற்றைக்கு 2500 ஆண்டுகளுக்கு முன்னர் இந்தியாவிலிருந்து இங்கு வந்த விஜயன் உள்ளிட்ட எழுநூறு பேர் கொண்ட குழுவினரால் இந்நாட்டில் குடியேற்றங்கள் அமைக்கப்பட்டன.



**செயற்பாடு - 11**

1. சேனைப் பயிர்ச் செய்கைக்குரிய தானியங்கள் மூன்று பற்றி விளக்கி எழுதுக.

2. இலுக் அல்லது மானாவால் வேயப்பட்ட மண் குடிசையின் படம் ஒன்றைத் தேடி அதனைக் கடதாசியில் ஒட்டி, அவ்வாறான வீட்டைக் கட்டுவதற்குப் பயன் படுத்துபவை யாவை என்பதை எழுதுக.

# 5. எமது பண்டைய அரசர்கள்

**அறிமுகம்**

எந்த ஒரு நாடும் முன்னேற்றம் அடைய வேண்டுமாயின் அந்நாட்டின் ஆட்சியாளன் புத்திசாலியாகவும், நீதி தவறாதவராகவும் இருக்க வேண்டும். இரண்டாயிரம் ஆண்டுகள் அளவிலான நீண்ட வரலாற்றையுடைய எமது நாடு ஏனைய நாடுகளுடன் உறவு கொண்டு செயற்பட்டுள்ளது. சிங்களத்தீவு, சிஹலதீப, செய்லான், செரன்டிப், தப்ரபேன் என்ற பெயர்களால் அழைக்கப் பட்ட எமது சிறிய தீவைப் பற்றி இந்து சமுத்திரத்தில் கப்பல்களில் பயணித்த பலர் அறிந்திருந்தனர். எமது நாடு எழில் மிகு தீவாக இருந்ததும், பெறுமதி வாய்ந்த பொருள்களை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்ததும் நாடு பிரசித்தி பெறக் காரணங்களாக அமைந்தன. நாட்டு மக்களின் நன்மை கருதி செயற்பட்ட அறிவுடைய சிறந்த அரசர்கள் எமது நாட்டை ஆட்சி செய்ததால் எமது நாடு சுதந்திர நாடாகத் திகழ்ந்தது. இந்தப் பாடத்தில் எமது நாட்டை ஆண்ட சிறந்த அரசர்கள் பற்றி நீங்கள் கற்கப் போகிறீர்கள்.

## 5.1 பண்டுகாபய மன்னன்

பண்டுகாபயனின் தந்தையின் பெயர் தீககாமினி. தாய் உன்மாத சித்ரா என்பவளாவாள். பண்டுகாபயன் பண்டுல என்ற பிராமணனிடம் கல்வி பயின்றான். சிறு பராயத்தில் அவன் எதிர்கொண்ட பல்வேறு சவால்கள், அடைந்த துன்பங்கள் என்பன பற்றி வரலாற்று நூல்களில் விளக்கப்பட்டுள்ளன. எதிர் காலத்தில் பண்டுகாபயன் அரசனாவதை விரும்பாத சிலர், அவன் அரசனாவதைத் தடுப்பதற்கான நடவடிக்கைகளை மேற் கொண்டனர். எனினும் தனது புத்திசாலித் தனத்தால் அனைத்து சவால்களையும் வெற்றி கொண்ட பண்டுகாபயன் உரிய வயதில் சுவர்ணபாலி என்பவளைத் திருமணம் செய்து கொண்டான். பின்னர் நாட்டின் அரசனானான்.

பண்டுகாபயன் அநுராதபுரத்திலிருந்து நாட்டை ஆட்சி செய்தான். அக் காலத்தில் அநுராதபுரம் அநுராதகம எனப்பட்டது. அப்பிரதேசம் முன்னேற்றம் அடைந்திருக்காமையே அவ்வாறு அழைக்கப்படுவதற்கான காரணமாகும். இதனைப் புரிந்து கொண்ட மன்னன் அநுராதகமவை முன்னேற்றி அநுராத புரமாக்க எண்ணினான்.

அநுராதபுரம் என்று அழைக்கப்பட வேண்டிய பிரதேசம் யாதென அடையாளங் கண்டு அதனைச் சுற்றி எல்லைகளை அடையாளமிட்டான். அதன் பின்னர் தான் கட்டியெழுப்ப இருக்கும் நகரின் பாதுகாப்பை முன்னிட்டு அப்பிரதேசத் தைச் சுற்றி அகழியை வெட்டினான். நகரினுள் நுழைவதற்கு வாயில்கள் தேவையானதால் முக்கிய நான்கு திசை களிலும் நான்கு வாயில்களை அமைத்து அந்த வாயில்கள் ஊடாக நகரின் ஏனைய பகுதிகளை இணைக்கும் வகையில் வீதித் தொகுதிகளை அமைத்தான். நகரின் உள்ளே நகரை அழகு படுத்தும் பூங்கா, தடாகம் என்பனவும் அமைக்கப்பட்டன.

நகரில் வாழும் மக்களின் குப்பை கூழங் களை அகற்றுதல் அவசியமென உணர்ந்த மன்னன் அதற்காகப் பணியாள்களை




உரு 5.1 பண்டுகாபய மன்னனால் திட்டமிடப்பட்ட அநுராதபுர நகரம் தொடர்பாக மகாவம் சத்தில் காணப்படும் விளக்கத்தின்படி வரையப்பட்ட படம்

நியமித்தான். நகரைச் சுத்தம் செய்வதற்கு 500 பேரும், மலசலகூடங்களை சுத்தம் செய்வதற்கு 22 பேரும், இறந்த உடல்களை அகற்றுவதற்கு 150 பேரும், மயானத்தை சுத்தம் செய்யவும், காவல் செய்யவும் 150 பேரும் நியமிக்கப்பட்டனர்.

நகரில் வாழ்வோரின் நலன் கருதி வைத்தியசாலை ஒன்றினை அமைக்க அவன் நடவடிக்கையை மேற்கொண்டான். பல்வேறு இன மக்களிடையே சமய சகிப்புத்தன்மையை ஏற்படுத்தும் நோக் குடன் ஒவ்வொரு சமயத்துக்கும் உரிய வெவ்வேறான வழிபாட்டிடங்களைக் கட்டுவித்தான். அக்காலத்தில் நகரில் கொல்லர்கள் வழிபட்ட கம்மாரதேவ என்ற பெயருள்ள தெய்வத்திற்கும் கோயில் கட்டியதுடன் வேடர்களின் தெய்வத்திற்கும் நகரின் மேற்கு வாசல் பகுதியில் கோயில் அமைத்துக் கொடுத்தான். அவ்வாறே சமய குருமாருக்கும் சமய நடவடிக்கை தொடர்பாகத் தேவையான கட்டடங்களை அமைத்துக் கொடுத்தான்.

நகரின் அருகில் முதன்முதல் குள மொன்றை அமைத்தவன் பண்டுகாபய மன்னனாவான். அக்காலத்தில் அந்தக் குளம் அபயவாவி எனப்பட்டது. இன்று அநுராதபுரத்தில் பசவக்குளம் என்ற பெயரில் காணப்படும் குளம் அதுவாகும். இவ்வாறு பண்டுகாபயன் மக்களின் நலன்கருதி கடினமாக உழைத்ததுடன் எழுபது ஆண்டுகள் வரை இந்நாட்டை ஆட்சி செய்தான். சிறுவயதில் பல துன்பங்களை அவன் எதிர்நோக்கிய போதிலும் அவை அனைத்தையும் வெற்றி கொண்டு இறுதியாக நாட்டின் முன்னேற்றத்தின் பொருட்டு அர்ப்பணத் துடன் செயலாற்றியமை சிறுவர்களாகிய

உங்கள் அனைவருக்கும் சிறந்த எடுத்துக் காட்டாகும்.

பண்டுகாபய மன்னனின் வாழ்க்கையை முன்மாதிரியாகக் கொண்டு நாட்டின் சிறந்த பிரசைகளாக வாழ நீங்களும் முயற்சிக்க வேண்டும்.

**முக்கிய விடயங்கள்**

1. பண்டுகாபயன் சிறு வயதில் பல துன்பங்களை அனுபவித்தான்.
2. அனைத்து சவால்களையும் வெற்றி கொண்ட அவன் பின்னர் நாட்டின் அரசனானான். சுவர்ணபாலி அவனது பட்டத்து அரசியாவாள்.
3. அநுராதகமவை அவன் அநுராதபுரமாக்கினான்.
4. பண்டுகாபய மன்னனால் அநுராதபுரம் எழில்மிகு நகரமாக்கப்பட்டது.
5. நகரின் அருகில் முதன்முதலாகக் குளமொன்றை பண்டுகாபய மன்னன் கட்டினான். இது அபய வாவியாகும்.



**செயற்பாடு - 12**

1. படம் 5.1 ஐ நன்கு அவதானிக்கவும்.
2. பண்டுகாபய மன்னன் அநுராதபுர நகரை நிர்மாணித்துள்ள விதம் பற்றி 5 வசனங்கள் எழுதுக.

## 5.2 தேவநம்பியதீச மன்னன்

தேவநம்பியதீசனின் தந்தை, பண்டுகாபயனின் மகனான மூடசிவன் ஆவான். அவனது தாய் யாரென்பது பற்றி வரலாற்று நூல்களில் எதுவும் குறிப்பிடப்படவில்லை. தேவநம்பியதீசனுக்கு ஒன்பது சகோதரர்களும், இரண்டு சகோதரிகளும் இருந்தனர். தீசன் குடும்பத்தில் இரண்டாவது பிள்ளை ஆவான். அரசனாவதற்கு முன்னர் அவனது பெயர் தீசன் என்பதாகும். மூடசிவனுக்குப் பின் தீசன் அரசனானான். அக்காலத்தில் வட இந்தியா அசோகப் பேரரசனால் ஆட்சி செய்யப்பட்டது. தீசன் அரசனான பின்னர் அசோகப் பேரரசனிடம் ஒரு தூதுக்குழுவை அனுப்பினான். அரிட்டன் அக்குழுவின் தலைவனாவான். அக்குழு இலங்கைக்குத் திரும்பி வருகையில் தீசனின் முடிசூட்டு விழாவிற்கு தேவையான பொருள்களை அசோகன் அனுப்பி வைத்தான். அசோகப் பேரரசனின் அறிவுரைப்படி தீசன் முடிசூட்டு விழாவை நடாத்தினான். அசோக மன்னன் பயன்படுத்திய ‘தேவநம்பிய’ என்ற மதிப்பிற்குரிய பெயரைப் பிற்காலத்தில் மன்னன் தீசனும் பயன்படுத்தினான். அப்பெயரின் கருத்து ‘கடவுளுக்குப் பிரியமானவன்’ என்பதாகும்.

அசோக மன்னனின் மகனான மகிந்த தேரர் தலைமையிலான பிக்குமார் குழு பௌத்த சமயத்தை இலங்கையில் பரப்புவதற்கு வந்தது, தேவநம்பியதீசன் இலங்கையை ஆட்சி செய்த காலத்திலாகும். இது நிகழ்ந்தது புத்தர் பெருமான் பரிநிர்வாணமடைந்து 237 ஆண்டுகளுக்குப் பின்னராகும். தேவநம்பியதீசன் மகிந்ததேரர் உள்ளிட்ட குழுவினரை மரியாதையுடன் வரவேற்றான். புத்த சமயம் இந்நாட்டில் நிலைநாட்டப்பட வேண்டுமாயின் அரசன்

அறிவுடையவனாக இருக்க வேண்டும் என்பதை மகிந்த தேரர் அறிந்திருந்தார். எனவே மன்னனின் அறிவைப் பரீட்சிக்கும் பொருட்டு அருகிலிருந்த மாமரமொன்றை மன்னனுக்குக்காட்டி மன்னனிடம் அவர் சில வினாக்களை வினாவினார்.



மகிந்த தேரரால் தீசனிடம் வினாவப்பட்ட வினாக்களும், மன்னனால் அளிக்கப்பட்ட பதில் களும்.

| | | |
|---|---|---|
| மகிந்த தேரர் | : | அரசே, இது என்ன மரம்? |
| மன்னன் | : | இது மாமரம் |
| மகிந்த தேரர் | : | அரசே, இந்த மாமரத்தை விட வேறு மா மரங்கள் உள்ளனவா? |
| மன்னன் | : | ஆம், சுவாமி வேறு மாமரங் களும் உள்ளன. |
| மகிந்த தேரர் | : | அந்த மாமரங்களைத் தவிர்ந்த வேறு மரங்களும் உள்ளனவா? |
| மன்னன் | : | ஆம், சுவாமி வேறு மரங்களும் உள்ளன. ஆனால் அவை மாமரங்கள் அல்ல. |
| மகிந்த தேரர் | : | அந்த மாமரங்களையும் மாமரங்கள் அல்லாத மரங்களையும் தவிர வேறு மரங்கள் உள்ளனவா? |
| மன்னன் | : | ஆம் சுவாமி. அது இந்த மா மரம். |

இவ்வாறு கேட்கப்பட்ட வினாக்களுக்குத் திறமையாக விடை அளித்தமையால் அரசன் புத்திசாலியானவன் என்பதை மகிந்த தேரர் விளங்கிக் கொண்டார்.

மகிந்த தேரர் அவருடன் வந்த இத்திய, உத்திய, சம்பல, பத்சால ஆகிய தேரர்கள் சுமண சாமனேரர், பண்டுக என்ற உபாசகர் உட்பட்ட குழுவினரை மன்னன் நன்கு உபசரித்தான். மகாமேகவனத்தையும், அங்கு திஸ்ஸாராம என்ற பெயரில் விகாரையையும் அமைத்து மகிந்த தேரருக்குக் காணிக்கையாக வழங்கினான்.

அநுராதபுரத்தில் தூபாராமையைக் கட்டியவன் தேவநம்பியதீசன் ஆவான். அவன் பிக்குமார்கள் தானம் பெறும் பொருட்டு மகாபாலி என்னும் தானசாலையையும், வேறு கட்டடங்களையும் நிறுவினான். பிக்குமாரின் கல்விக்குத் தேவையான பிரிவெனாக்கள் சிலவற்றையும் கட்டிய மன்னன் அப்பிரதேசம் முழுவதையும் மகாவிகாரை எனப் பெயரிட்டுச் சங்கத்தினருக்கு வழங்கினான்.



**தூபாராம**

தேவநம்பியதீசனால் தூபாராம கட்டப்பட்டது. தூபி ஒன்று எந்த வடிவில் அமைய வேண்டு மென்பதை மன்னன் மகிந்த தேரரி டம் கேட்டான். அது நெற்குவியல் வடிவத்தில் அமைய வேண்டுமென தேரர் கூறினார். எனவே தூபாராம தானியக்குவியல் வடிவில் நிர் மாணிக்கப்பட்டது. எனினும் பிற் காலத்தில் மேற்கொள்ளப்பட்ட புனரமைப்புக்களின் விளைவாகத் தற்போது அது மணி வடிவத்தில் காணப்படுகிறது.

புத்தரின் வலது தாடை எலும்பை வைத்து தூபாராமை அமைக்கப்பட்டுள்ளது. தூபாராம தூபியைச் சுற்றி மூன்று கற்றூண் வரிசைகள் அமைந்துள்ளன. அந்தக் கற்றூண்கள் முற்காலத்தில் தூபியைப் பாதுகாக்கும் பொருட்டு அமைக்கப்பட்ட கட்டடத்தைச் சேர்ந்தனவாகும். அவ்வாறான கட்டடங்கள் வட்டதாகே எனப்படும். தூபாராமைக்கு வட்டதாகே மனை ஒன்றினை அமைத்தவன் வசப மன்னனாவான்.



உரு 5.2 தேவநம்பியதீச மன்னன் அநுராதபுர எல்லையை அடையாளப்படுத்தியமை

தேவநம்பியதீசன் இலங்கையை ஆட்சி செய்த காலத்திலேயே வெள்ளரசுக் கிளை இங்கு கொண்டு வரப்பட்டது. அதனைக் கொண்டு வந்த பிக்குணி சங்கமித்தை பயணித்த கப்பல் ஜம்புகோளப்பட்டிணம் துறை முகத்தை வந்தடைந்தது. அது யாழ்ப்பாணத்தில் அமைந்துள்ளது. வெள்ளரசுக் கிளையையும் பிக்குணி சங்கமித்தாவையும் வர வேற்கும் பொருட்டு அங்கு சென்ற மன்னன் மிகவும் கோலாகலமாக சங்கமித்தை குழுவினரையும், வெள்ளரசுக் கிளையையும் வர வேற்று அநுராதபுரத்திற்குக் கொண்டு வந்தான். பிக்குணி சங்கமித்தையுடன் தொழில்களில் தேர்ச்சி பெற்ற பதினெட்டுக் குலத்தைச் சேர்ந்த குழுவினரும் இங்கு வந்தனர். வெள்ளரசுக் கிளையை மன்னன் மகாமேக வனத்தில் கோலாகலமாக நாட்டிய துடன் மஹாபோதிமனை என்ற பெயரில் கட்டடமொன்றையும் அமைத்து அதனைப் பிக்கு மாருக்கு வழங்கினான். இது தவிர அவர்களது தேவையின் பொருட்டு குளங்கள் முதலியவற்றையும் அமைத்தான்.



உரு 5.3 பிக்குணி சங்கமித்தையால் புனித வெள்ளரசுக்கிளை மன்னன் தேவநம்பியதீசனது காலத்தில் இலங்கைக்குக் கொண்டு வரப்பட்டது.

மன்னன் மிகிந்தலை மலையைச் சுற்றி யுள்ள கற்குகைகளை சுத்தம் செய்வித்து மகிந்த தேரர் குழுவினர், மற்றும் புத்த சமயத்தைத் தழுவி துறவறத்தை மேற்கொண்டிருந்த குழுவினர் ஆகியோர் வசிப்பதற்காக அவற்றைத் தானமாக வழங்கினான். அவை அட்டசெட்டலென் எனப்பட்டன. அவ்வாறு தானமாக வழங்கப்பட்ட குகைகளின் எண்ணிக்கை அறுபத்தெட்டாக இருந்ததால் அவை அவ்வாறு அழைக்கப்பட்டன.

தேவநம்பியதீசனால் மேற்கொள்ளப்பட்ட இன்னுமொரு முக்கிய செயற்பாடாக விளங்கியது அநுராதபுரநகர எல்லையை அடையாளப்படுத்தியமையாகும். பௌத்த விகாரைகளை அமைத்து நகரை மேலும் அலங்கரிப்பதே அரசனின் நோக்கமாக இருந்தது. நகர எல்லையைத் தீர்மானிக்க மகிந்த தேரர் அரசனுக்கு வழிகாட்டினார். அவரின் அறிவுரைப்படி மகாபதும, குஞ்ச என்ற இரண்டு யானைகளால் இழுத்துச் செல்லப்பட்ட



உரு 5.4 புனித வெள்ளரசுக் கிளையை அநுராதபுரத்திற்குக் கொண்டு வந்து கோலாகலமாக அதனை நாட்டுவதற்குத் தேவ நம்பியதீசன் நடவடிக்கை எடுத்தான்.

கலப்பையினால் அரசன் அந்த எல்லையை அடையாளப்படுத்தியதாக வரலாற்றில் குறிப்பிடப்பட்டுள்ளது.

இலங்கையில் புத்த சமயத்தை தழுவிய முதலாவது மன்னன் தேவநம்பியதீச னாவான். அவனது சகோதரனின் மனை வியாகிய அனுலாதேவி பிக்குணியானதன் மூலம் இலங்கையில் பிக்குணி சாசனம் ஆரம்பமானது. அரசனின் உறவினனான அரிட்டன் என்பவன் பிக்குவானதன் மூலம் இந்நாட்டில் பிக்குசாசனம் ஆரம்ப மானது. தேவநம்பியதீச மன்னனின் தூரநோக்கு அறிவினாலும் பக்தியினாலும் இலங்கையில் பலர் பௌத்த சமயத்தைச் தழுவினர். தேவநம்பியதீச மன்னனைப் பின்பற்றி நாமும் நாட்டிற்கு நற்பணி செய்ய முயலுவோமாக.

**முக்கிய விடயங்கள்**

1. தேவநம்பியதீச மன்னனின் பெய ருடன் இணைந்துள்ள 'தேவ நம்பிய' என்பது கடவுளுக்குப் பிரியமானவன் என்ற கருத்தைக் கொண்டுள்ளது.
2. அசோக மன்னனின் அனுசரனை யுடன் தேவநம்பியதீச மன்னன் இரண்டாம் முறையாக முடி சூடிக் கொண்டான்.
3. இம் மன்னனின் ஆட்சிக் காலத்தில் புத்த சமயமும் வெள்ளரசுக் கிளையும் இலங்கைக்குக் கொண்டு வரப்பட்டன.
4. இந்த மன்னனால் அநுராதபுரத்தி லுள்ள தூபாராம கட்டப்பட்டது.
5. இம் மன்னனின் காலத்தில் அநுராத புர நகரின் எல்லைகள் குறிக்கப் பட்டன.



**செயற்பாடு - 13**

தேவநம்பியதீச மன்னனின் ஆட்சிக் காலத்தில் நிகழ்ந்த பின்வரும் முக்கிய நிகழ்வினை வெளிப்படுத்தும் படங் களை ஒட்டி அவை ஒவ்வொன் றைப் பற்றியும் மூன்று வாக்கியங்கள் எழுதுக.

1. மகிந்ததேரர் உள்ளிட்ட குழுவின ரின் வருகை
2. புனித வெள்ளரசுக்கிளை இலங் கைக்குக் கொண்டுவரப்பட்டமை.
3. தூபாராம அமைக்கப்பட்டமை.

### எல்லாள மன்னன்

எல்லாள மன்னன் சோழ நாட்டிலிருந்து இந் நாட்டிற்கு வந்தவனாவான். அனுராத புரத்தின் மேற்கு கரையோரத்தில் அமைந் திருந்த மாந்தோட்ட துறைமுகத்தின் வர்த்தக, விவசாய நடவடிக்கைகள் மூலம் இந்நாட்டிற்கு கிடைத்த வருமானம் அனைத்தையும் இக்காலப்பகுதியில் எல் லாள மன்னனே பெற்றுக்கொண்டான்.

இவன் நீதி தவறாத நேர்மையான ஆட்சியாளனாவான் ஒரு நாள் இவன் பயணித்த தேர் தாதுகோபமொன்றில் மோதி அத்தாதுகோபத்தின் ஒரு பகுதி சேதமடைந்தது. அதனை புனர்நிர்மாணம் செய்வதற்கான நடவடிக்கைகளை மன் னன் மேற்கொண்டதாக மகாவம்சத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

## 5.3 துட்டகைமுனு மன்னன்

துட்டகைமுனு இலங்கையை ஆட்சி செய்த சிறந்த அரசனாவான். அவனது தந்தையின் பெயர் காவந்தீசன். தாய் விகார மகாதேவி. துட்டகைமுனுவுக்கு தீசன் என்ற பெயரில் சகோதரன் ஒருவன் இருந்தான். இந்த அரச குடும்பம் மாகம இராசதானியில் வாழ்ந்து வந்தது. இலங்கையின் தென், மற்றும் தென்கிழக்குப் பிரதேசம் என்பன மாகம இராசதானியில் அடங்கி இருந்தன. அக்காலத்தில் இது உருகுணைரட்ட எனப் பட்டது.

துட்டகைமுனு ஆட்சிக்கு வருவதற்கு முன் எல்லாளன் என்ற அரசனே அநுராத புரத்தை ஆட்சி செய்தான். அவன் நீதியான ஆட்சியாளனாவான்.

இந்நாட்டை அந்நிய ஆதிக்கத்திலிருந்து விடுவித்து நிலையான சமாதானத்தை ஏற்படுத்துவதற்கு தனக்கு சந்தர்ப்பம் கிடைத்தால் தன்னால் நாட்டை முன்னேற்ற முடியும் என்பதை உணர்ந்து கொண்ட துட்டகைமுனு தான் உரிய வயதை அடைந்ததும் அநுராதபுரத்தை ஆட்சி செய்ய உறுதி பூண்டான். துட்டகைமுனுவின் நோக்கத்தை அறிந்த காவந்தீச மன்னன் அதற்குத் தகுந்த பலம் வாய்ந்த குழுவினரைத் தயார் செய்ததுடன் உணவு உற்பத்தியை அதிகரிக்கவும் செய்தான். இதன் பொருட்டுத் துட்டகைமுனுவின் சகோதரனான தீசனை திகாமடுல்லவுக்கு அனுப்பினான். அப் பிரதேசம் தற்போதைய அம்பாறை மாவட்டமாகும்.

துட்டகைமுனுவும், எல்லாளனும் ஒருவரை ஒருவர் நேரடியாக சந்தித்துப் போர் புரிந்தது விஜித்தபுரத்திலாகும். அந்த யுத்தத்தில் 44 ஆண்டுகளாக அநுராதபுரத்தை ஆட்சி செய்த எல்லாளனின் ஆட்சி முடிவுக்கு வந்தது. எல்லாளனுடனான யுத்தத்தில் துட்டகைமுனுவுக்கு பத்து சிறந்த சேனாதி பதிகள் இருந்தனர். நந்திமித்திர, சுரநிமல, மகாசோன, கோதயிம்பர, தேரபுத்தாபய, பரண, வேலுசுமண, கஞ்சதேவ, புஸ்ஸதேவ, லபியவசப என்பவர்களே அவர்களாவர். இவர்களில் சிலரால் அமைக்கப்பட்ட கல்வெட்டுக்களும் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன.

துட்டகைமுனு அநுராதபுரத்தின் அரசனான பின்னர் அவர்கள் பத்து மாமல்லர்கள் எனப் புகழ் பெற்றனர். துட்டகைமுனுவுக்கு கண்டுல எனும் யானையும் உதவியது.

அரசனான பின்னர் துட்டகைமுனு அநுராதபுரத்தில் பல விகாரைகளை அமைத்தான். மிரிஸவட்டிய ருவான்வெலி சாய லோவமகாபாயா என்பன இவற்றுள் சிலவாகும். ருவன்வெலிசாயவை அமைத்து முடிக்கும் முன்னர் மன்னன் இறந்து விட்டான். பின்னர் அதன் வேலைகளை முடித்து வைத்தவர் அவருடைய சகோதரரான சத்தாதீசன் அரசராவார். துட்டகைமுனு 99 விகா ரைகளை அமைத்ததாக வரலாற்றில் குறிப்பிடப்பட்டுள்ளது. இவை தவிர மக்களின் நன்மை கருதி மன்னனால் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன.



உரு 5.6 துட்டகைமுனு மன்னனால் கட்டப்பட்ட ருவன்வெலிசாய அவன் மரணத்தருவாயில் இருந்தபோது முழுமையாகக் கட்டிமுடிக்கப்பட்டிருக்கவில்லை. கட்டி முடிக்கப்படாத பகுதியை அவனது சகோதரனான சத்தாதீசன் வெள்ளைத்துணியால் கட்டி அரசனுக்குக் காட்டினான்.



துட்டகைமுனு கட்டுவதற்கு ஆரம்பித்த ருவன்வெலிசாய வரலாற்று மூலாதாரங்களில் மகாதூபம் என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. பாளி மொழியில் எழுதப்பட்ட நூல்களில் அதற்கு ரத்னமாலி சைத்தியம் என்ற பெயரே வழங்கப்பட்டுள்ளது. இந்தியாவில் ராமகாம தூபியில் வைக்கப்பட்டிருந்த புத்தர்பெருமானின் சரீரதாது பின்னர் ருவன்வெலி சாயவில் வைக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. ஆரம்ப காலத்தில் இந்தத் தூபியின் உயரம் 300 அடியாகும். தாது கர்ப்பத்தின் அடிப்பகுதியின் விட்டம் 298 அடியாகும். இந்தத் தூபியைக் கட்டி முடித்தவன் சத்தாதீசன் மன்னனாவான். இம் மன்னனின் மகனான லஞ்சதீச மன்னனால் ருவன்வெலிசாய புனர்நிர்மாணம் செய்யப்பட்ட போதிலும் இந்த தூபியை எவரும் பெருப்பித்துக் கட்டியதாக வரலாற்று இலக்கியங்கள் மூலமோ தொல்பொருள் மூலமோ உறுதிப்படுத்தப்படவில்லை.



உரு 5.5 எல்லாள மன்னனின் மகனின் தேர்ச்சில் லில் அடிபட்டுக் கன்று இறந்த பின்னர், அதற்காக நீதி கேட்டு கன்றின் தாயாகிய பசு, எல்லாள மன்னனின் மாளிகைக்கு வந்து, அங்குள்ள மணியை அடித்ததாகக் கூறப்படுகிறது. அக்காட்சி 19 ஆம் நூற்றாண்டில் பௌத்த விகாரையொன்றில் சித்திரமாக வரையப்பட்டுள்ள விதம்.

எல்லாள மன்னன் இறந்த பின்னர் அவன் அடக்கம் செய்யப்பட்ட கல்லறை வழியாக செல்லும்போது அதற்கு மரியாதை செலுத்தும்படி துட்டகைமுனு மன்னன் மக்களுக்குக் கட்டளை பிறப்பித்தான்.

துட்டகைமுனுவின் வீரச் செயல்களினால் பிற்காலத்தில் அவனதும், அவனது பெற்றோர், சகோதரன், மற்றும் அவனுக்கு உதவிய சேனாதிபதிகள் பற்றியும் மனம் கவரும் பல கதைகள் உருவாக்கப்பட்டுள் ளன. துட்டகைமுனு என்ற பெயரால் அவன் பிரசித்தியடைந்த போதிலும் அவனது உண்மையான பெயர் காமினி அபயன் என்பதாகும். அரசனான பின்னரே துட்டகைமுனு என்ற பெயரால் அவன் அழைக்கப்பட்டான். சமஸ்கிருத மொழியில் துட்டு என்ற சொல்லின் கருத்து அறிவாளி என்பதாகும்.

ஒரு இலக்கை அடைவது எவ்வளவு கடினமாயினும் நீண்ட காலமாகத் திட்டமிட்டுப் புத்தியுடனும், தைரியத் துடனும் செயற்படுவதன் மூலம் அதனை அடைந்து கொள்ளுதல், நாட்டுக்கும், சமயத்திற்கும் பற்றுடையவனாக இருத்தல், மதிக்க வேண்டியவர்களை மதித்தல், நாட்டு மக்களை நேசித்தல் என்பன துட்டகைமுனுவின் வாழ்வில் தெளிவாகக் காணப்பட்ட விடயங்களாகும். அவ்வாறான அரசர்கள் வாழ்ந்த வரலாற்றை யுடைய நாட்டில் பிறந்த நீங்களும் அதன் மூலம் படிப்பினைகளைப் பெற்று அதன் படி செயற்படவும் நடக்கவும் முயற்சி செய்ய வேண்டும்.

## முக்கிய விடயங்கள்

1. துட்டகைமுனு மன்னன் இலங் கையை ஒன்றிணைத்தான்.
2. அவன் மாகமையில் தோன்றிய ஆட்சியாளனாவான்.
3. துட்டகைமுனு மன்னனுடைய செயற்பாடுகள் வெற்றி பெறு வதற்கு அவனது பெற்றோர், சகோதரன் ஆகியோர் அர்ப்பணிப் புடன் செயற்பட்டனர்.
4. நாட்டை ஒன்றிணைப்பதற்கு அவனுக்குத் திறமையான பத்து சேனாதிபதிகள் உதவினர்.
5. அநுராதபுரத்திலுள்ள மிரிஸ வெட்டிய, ருவன்வெலிசாய, லோவமகாபாய என்பன இம் மன்னனால் நிறுவப்பட்டவை யாகும்.
6. துட்டகைமுனு மன்னனது காலத்திற்கு முன்னர் ஆட்சி செய்த எல்லாள மன்னன் நீதியில் சிறந்த மன்னனாவான். அவன் 44 ஆண்டுகள் அநுராதபுரத்தை ஆட்சி செய்தான்.



**செயற்பாடு - 14**

பின்வரும் தலைப்புக்களில் நீர் விரும்பும் ஒரு தலைப் பினைத் தெரிவு செய்து வகுப்பில் உரை ஒன்றை நிகழ்த்தவும்.

1. துட்டகைமுனு மன்னன்
2. எல்லாள மன்னன்
3. காவந்தீச மன்னன்

## 5.4 வலகம்பா மன்னன்

எமது நாட்டை ஆட்சி செய்த புகழ்வாய்ந்த ஆட்சியாளர்களுள் வலகம்பா மன்னனும் ஒருவனாவான். அவனது தந்தை சத்தா தீசன், தாய் யார் என்பது பற்றிப் பழைய நூல்களில் குறிப்பிடப்படவில்லை. இவ னுக்கு தூலதத்தன், லஞ்சதிஸ்ஸன், நாக எனும் மூன்று சகோதரர்கள் இருந்தனர். பிற்காலத்தில் கல்லாடநாகன் என்று வரலாற்று நூல்களில் குறிப்பிடப்படுபவன் நாக என்ற சகோதரன் ஆவான். வலகம்பா மன்னனின் மனைவி சோமாதேவி என்பவளாவாள்.

வலகம்பா மன்னனின் ஆட்சிக்காலம் குழப்பங்கள் நிறைந்ததாக இருந்தது. தென்னிந்தியப் படையெடுப்புக்கும், இந்நாட்டிலேயே வாழ்ந்த திஸ்ஸ என்ற பிராமணனால் ஏற்படுத்தப்பட்ட கலகத்திற்கும் முகங்கொடுக்கவும் இம் மன்னனுக்கு நேரிட்டது. எனினும் தைரியமாகவும், புத்திசாலித்தனமாகவும் அவைகளை வெற்றி கொண்டான்.

அநுராதபுரத்தில் உள்ள அபயகிரி விகாரை வலகம்பா மன்னனால் கட்டப்பட்டதாகும். மன்னன் அந்தத் தூபியையும் அதனுடன் தொடர்புடைய விகாரையையும் அமைத்துக் குப்பிக்கலதிஸ்ஸ என்ற பிக்குவுக்கு வழங்கினான். மன்னன் துன்பத்தில் சிக்கியிருந்த சந்தர்ப்பத்தில் அவனுக்கு உதவி புரிந்தவர் இந்த குப்பிக்கலதிஸ்ஸ தேரர் ஆவார். அதற்கு நன்றி செலுத்தும் முகமாகவே இவ்வாறு அபயகிரி விகாரையை மன்னன் அவருக்கு வழங்கினான். பிற்காலத்தில் அபயகிரி விகாரை சர்வதேச கல்வி நிலையமாகியது.

வலகம்பா மன்னனின் ஆட்சிக் காலத்தில் நிகழ்ந்த மற்றுமொரு முக்கிய பணியாக அமைந்தது அதுவரை வாய்மொழி மூலமாக பாதுகாக்கப்பட்டு வந்த

பௌத்த போதனைகள் நூல்களாக எழுதப்பட்டமையாகும். புத்தர் பெருமானின் போதனைகள் முழுவதும் உள்ளடங்கியிருப்பது திரிபிடகத்திலாகும். திரிபிடகத்தை புத்தகங்களாக எழுதுவது திரிபிடகம் நூலுருப் பெறுதல் எனப்படும். இது மாத்தளையிலுள்ள அலுவிகாரையில் வைத்து எழுதப்பட்டதாக வரலாற்றில் குறிப்பிடப்பட்டுள்ளது. வலகம்பா மன்னன் காட்டில் இருந்த காலத்தில் கடுமையான வரட்சி ஏற்பட்டது. பல வருடங்களாக மழை இல்லாது இருந்ததால் ஏற்பட்ட இப்பஞ்சம் பெமினிதியாஸாய பஞ்சம் எனப்படும். இந்தப் பஞ்சத்தின் காரணமாக அதுவரை திரிபிடகத்தை மனனஞ் செய்து வந்த பிக்குமாரில் சிலர் இறந்தனர். இவ்வாறு மனனம் செய்வதால் மாத்திரம் திரிபிடகத்தை பாதுகாத்தல் எதிர்காலத்தில் புத்த சமயத்திற்குத் தீங்கு ஏற்பட இடமுண்டு என்பதனைப் புரிந்து கொண்ட மன்னன் அதனை நூலாக்குவதற்கு முயற்சிகள் மேற்கொண்டான். இந்த இக்கட்டான காலகட்டத்தில் திரிபிடகத்தை நூல் வடிவில் எழுதுவித்தமையானது உலக பௌத்த மக்களுக்கு இலங்கையரால் ஆற்றப்பட்ட மகத்தான பணியாகும்.



உரு 5.7 நீண்ட காலமாக வாய்மொழி மரபாக இருந்த திரிபிடகம் தொடர்ந்தும் அந்நிலையில் இருப்பதன் பின்விளைவை உணர்ந்த வலகம்பா மன்னன் மாத்தளையிலுள்ள அலுவிகாரைக்குப் பிக்குகளை வரவழைத்து அதனை எழுத்துருப் பெறச் செய்தமை.

வலகம்பா மன்னனால் பிக்குமாருக்குக் கற்குகைகள் தானமாக வழங்கப்பட்டன. அவனது பெயர் குறிப்பிடப்பட்டுள்ள கல் வெட்டுக்களுடனான கற்குகைகள் சில கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. கல் வெட்டுக் களில் இவன் 'பித்தரஜ' என்ற பெயரால் குறிப்பிடப்பட்டுள்ளான். இதற்குக் காரணம் அவன் அக்காலத்தில் அப் பெயராலும் அழைக்கப்பட்டமையாகும். வலகம்பாவின் சகோதரனான கல்லாட நாகன் இறந்த பின்னர் அவனது மகனைத் தந்தைக்குரிய அன்புடன் பராமரித்ததால் பித்தரஜ என அழைக்கப்பட்டான் என்று மகாவம்சம் குறிப்பிடுகிறது. பித்தரஜ என்பது கல்வெட்டுக்களில் பிதமஹாரஜ, பிதரஜ எனவும் குறிப்பிடப்பட்டுள்ளன.

வலகம்பா மன்னனின் மனைவியான சோமாதேவி ஒரு வீரப் பெண்மணியாவாள். தென்னிந்தியாவிலிருந்து இங்கு வந்த குழுவினரால் மன்னனுக்கு இடையூறு



அபயகிரி விகாரை வலகம்பா மன்னனால் நிறுவப்பட்டதாகும். அவன் அதனை குப்பிகலதிஸ்ஸ என்ற பிக்குவுக்கு வழங்கினான். ஆரம்பத்தில் இதன் உயரம் 350 அடிகளாகவும் தாதுகர்ப்பத்தின் அடிப்பகுதியின் விட்டம் 355 அடிகளாகவும் இருந்தன. சிதைவுற்ற பின்னர் தற்போது அதன் உயரம் 245 அடிகளாகும். இதனுள் எந்த விதமான புனிதப்பொருள் வைக்கப்பட்டுள்ளது என்பது பற்றி எந்த மூலாதாரங்களிலும் குறிப்பிடப்படவில்லை. முதலாம் கஜபாகு மன்னன் அபயகிரி விகாரையைப் பெரிதாக்கி அதன் முற்றத்தில் நான்கு வாயில்களை அமைத்தான். கனிட்ட திஸ்ஸ மன்னனால் தூபியின் பிரதான நான்கு திசைகளிலும் வாகல்கட அமைக்கப்பட்டது. இந்தத் தூபியைத் தவிர பெரிய ஆராமைக் கட்டடங்களும் அபயகிரி விகாரைக்கு உரியனவாகும்.

ஏற்பட்ட வேளையில் இவள் மன்னனின் பாதுகாப்பின் பொருட்டு இரதத்திலிருந்து கீழே இறங்கினாள். பகைவர் கையில் சிக்கிய அவளை அவர்கள் தென்னிந் தியாவுக்குக் கொண்டு சென்றனர். பகைவர்களை வெற்றிகொண்ட பின்னர், வலகம்பா மன்னன், சோமாதேவியை மீண்டும் இலங்கைக்கு அழைத்து வந்து பட்டத்து இராணியாக்கினான். தமது நாட்டிற்காகத் தைரியத்துடன் செயற்பட்ட சோமாதேவி போன்றோரை நினைக்கும் போது எமக்கும் பெருமை ஏற்படுகிறது. வலகம்பா மன்னன் நாட்டு மக்களின் நலன் கருதிப் பல பணிகளைச் செய்தான். பிக்குமாரின் கல்வி முன்னேற்றத்தின் பொருட்டுப் பிரிவெனாக்கள் அமைத்தான். சோமாதேவி பகைவர்கள் கையில் சிக்கிய இடத்தில் நினைவுச் சின்னமாக சோமாராமவை கட்டுவித்து அதனைப் பிக்குமாருக்கு வழங்கினான்.

பல்வேறு இடையூறுகள் ஏற்பட்ட போதி லும் வலகம்பா மன்னன் அவற்றிற்குப் பொறுமையுடன் முகங்கொடுத்து செயற் பட்ட முறை உங்களுக்கு சிறந்த முன்மாதிரியாகும். தூரநோக்குடனான அந்த மன்னனின் வாழ்க்கையை முன்னு தாரணமாகக் கொண்டு நீங்களும் செயற்பட வேண்டும்.

**முக்கிய விடயம்**

1. வலகம்பா மன்னனின் தந்தை சத்தா தீசன் மன்னனாவான்.
2. வலகம்பா மன்னனின் ஆட்சி காலத்தில் பகைவர்களினால் ஏற் பட்ட இன்னல்களுக்கு முகங் கொடுக்க வேண்டிய நிலை அவனுக்கு ஏற்பட்டது.
3. வலகம்பாவின் மனைவி சோமா தேவி தைரியமான பெண்ணா வாள்.
4. அபயகிரி விகாரையை அமைத் தமை, திரிபிடகத்தை நூலுருப் பெறச் செய்தமை என்பன இம் மன்னனால் ஆற்றப்பட்ட முக்கிய பணிகளாகும்.



**செயற்பாடு - 15**

'வலகம்பா ஒரு சிறந்த மன்னன்' என்ற தலைப்பில் பத்து வசனங்கள் எழுதுக.

## 5.5 வசப மன்னன்

வசப மன்னன் புதிய அரச வம்சம் ஒன்றினை ஆரம்பித்த ஆட்சியாளனாவான். வசப மன்னனின் பெற்றோர் யாரென்பது பற்றி வரலாற்று நூல்களில் குறிப்பிடப்படவில்லை. இளமைக்காலத்தில் அவன் தனது மாமனார் வீட்டில் வாழ்ந்துள்ளான். வசப மன்னனின் மாமனார் அக்காலத்தில் நாட்டின் சேனாதிபதியாக விளங்கியவர். வசப மன்னன் இலம்பகர்ண வம்சத்தைச் சேர்ந்தவன். இலம்பகர்ணர்கள் முன்னர் நாட்டின் ஆவண வேலைகளுக்குப் பொறுப்பாக இருந்தவர்களாவர். இலங்கையை ஆட்சி செய்த சிறந்த அரசர்களில் சிலர் இலம்பகர்ண வம்சத்தைச் சேர்ந்தவர்களாவர். அந்த வம்சத்தின் முதல் ஆட்சியாளன் வசபன் ஆவான்.

வசப மன்னன், மக்களின் நன்மைக்காகவும், புத்த மதத்தின் முன்னேற்றத்திற்காகவும் பெரும் பணியாற்றினான். சிறப்பாக இந்த மன்னனின் காலத்தில் எமது நாட்டில் குளங்கள் அமைக்கும் முறையில் முன்னேற்றம் காணப்பட்டது. அம் மன்னனால் முதன் முறையாகப் பதினொரு பாரிய குளங்கள் அமைக்கப்பட்டன. குளங்களிலிருந்து வயல்களுக்கு நீரைக் கொண்டு செல்வதற்குப் பன்னிரெண்டு கால்வாய்கள் அமைக்கப்பட்டன. அம்பன் கங்கையிலிருந்து 30 மைல் தூரத்துக்கு நீரைக் கொண்டு செல்லும் எலகரக் கால்வாயும் (ஆழிசாரக் கால்வாய்) வசப மன்னனின் நிர்மாணமாகும்.

வசப மன்னனால் அமைக்கப்பட்ட குளங்களில் சில அமைந்துள்ள இடங்கள் அடையாளம் காணப்பட்டுள்ளன. அவனால் அமைக்கப்பட்ட மயெந்திக்குளம் இன்று மகாவிலச்சிக்குளம் எனப்படுகிறது. மானாகெட்டி எனும் குளம் மானான் கட்டிய குளம் என்பதாகும். வாதமங்கனக் குளம் இன்று நொச்சிபொத்தானக் குளம் எனப்படுகிறது. இவை அனைத்தும் அநுராதபுர மாவட்டத்திலேயே அமைந்துள்ளன. அக்காலத்தில் இருந்த நீராடும் பொய்கைகளுக்குக் கால்வாய்கள் மூலம் நீரைக்கொண்டு செல்வதற்குப் பதிலாக தரைகீழ் அமைக்கப்பட்ட குழாய்கள் வழியாக நீரைக் கொண்டு செல்லும் சுரங்கக் கால்வாய் முறை வசப மன்னனின் பொறியியலாளர்களால் அறிமுகம் செய்யப்பட்டது.

நாட்டின் நிர்வாகத்தை இலகுவாக்கும் பொருட்டு நாட்டைப் பிரதேசங்களாகப் பிரித்து, அவைகளை நிர்வகிக்கும் பொருட்டு அரச அதிகாரிகளை மன்னன் நியமித்தான். யாழ்ப்பாணப் பிரதேசத்தை நிர்வகிக்கும் பொருட்டு இசிகிரிய என்ற பெயரையுடைய அமைச்சன் ஒருவன் நியமிக்கப்பட்டான். இது பற்றி அரசன் பொன்தகடொன்றில் பொறித்துள்ளான். அது வல்லிபுர பொற்சாசனம் எனப்படும். இசிகிரிய என்ற அமைச்சன் யாழ்ப்பாணப் பிரதேசத்தில் பியங்குகதிஸ்ஸ என்ற பெயரில் விகாரையொன்றை அமைத்ததாக வல்லிபுர பொற்சாசனத்தில் எழுதப்பட்டுள்ளது. யாழ்ப்பாணத்தில் வல்லிபுரம் என்ற இடத்தில் அது கண்டுபிடிக்கப்பட்டதால் அப்பெயரைப் பெற்றுள்ளது.

அநுராதபுரத்தின் பாதுகாப்பையும் வனப்பையும் அதிகரிக்க மன்னனால் பெரும்பணி ஆற்றப்பட்டது. அநுராதபுர நகரைச் சுற்றி மதில்கள் அமைக்க மன்னன் நடவடிக்கை எடுத்தான். இவற்றின் சிதைவுகளை இன்றும் அநுராதபுரத்தில் காணலாம். நகரில் ஆங்காங்கே பொய்கைகளை அமைத்து வாவிகளிலிருந்து அவற்றிற்கு நீர் பாய்ந்து செல்வதற்கான திட்டங்களை மேற்கொண்டான். பின்னர் அவற்றில் அன்னங்களை வளர்க்கும்படி அறிவுரை வழங்கினான்.

புத்த சமய வளர்ச்சிக்கு வசப மன்னனால் மகத்தான சேவை ஆற்றப்பட்டது. தூபாராம தூபிக்கு வட்டதாமனை ஒன்றும், இசுருமுனி விகாரையில் போயாமனையும் அமைத்துப் பிக்குமாருக்கு வழங்கினான்.

திஸ்ஸமகாராமையில் அமைந்துள்ள சித்துல்பவ்வ விகாரைக்கு தூபியை அமைப்பித்தான். அது மட்டுமன்றி நாட்டின் பல பாகங்களிலுமிருந்த விகாரை களைப் புனர்நிர்மாணம் செய்வதற்கான நடவடிக்கைகளை மேற்கொண்டான்.

பொதுமக்களின் நன்மை கருதி செயற் படுவதற்கு அதிக பணத்தை செலவிட வேண்டிய நிலை ஏற்பட்டது. அரச சொத்துக்களைக் கவனமாகப் பயன்படுத்த வேண்டும் என்பதை மக்கள் உணர்ந்து கொள்ளவும், அவற்றை தகுந்த முறையில் நிர்வகிக்கவும் மன்னன் வரி அறவிடும் முறையொன்றை நாட்டு மக்களுக்கு அறிமுகம் செய்தான். இதன்படி அரசுக்கு சொந்தமான வாவிகளிலிருந்து நீரைப் பெற்றவர்கள் அரசனுக்கு வரி செலுத்தினர். அந்தப் பணம் வாவிகளைப் புனருத்தாரணம் செய்வதற்குப் பயன்படுத்தப்பட்டது.

44 ஆண்டுகள் இந்நாட்டை ஆட்சி செய்த வசப மன்னன் இந்நாட்டில் புதுயுகம் ஒன்றைத் தோற்றுவித்தான். அவனது தைரியமும் தூரநோக்குச் சிந்தனையும், பொறுமையுடன் செயற்பட்ட தன்மையும் உமது வாழ்விற்கும் முன்னுதாரணங்களாக அமைகின்றன.



உரு 5.8 வசப மன்னனால் அநுராதபுரத்தில் நகர மதில்களை உயர்த்திக் கட்டுவதற்கு நடவடிக்கை எடுக்கப்படல்.



பூக்கள் அனைத்திலும் மல்லிகைப் பூவின் மணமே சிறந்தது என வசப மன்னன் கேள்விப் பட்டான். அது உண்மையா என்பதைப் பரீட் சிக்க மன்னன் விரும்பினான். பலவித பூக்க ளிலும் ஒவ்வொரு பிடியளவும், மல்லிகைப் பூவில் ஒரு பிடியளவும் அறையொன்றில் வைத்து விட்டுக் கதவை மூடிய பின்னர் மன்னன் வெளியேறினான். சிறிது நேரத்தில் கதவைத் திறந்ததும் ஏனைய பூக்களின் மணத் திற்கு முன்னதாக மல்லிகைப் பூவின் வாச னையை மன்னன் நுகரக்கூடியதாக இருந்தது. எதனையும் ஆராய்ந்து அறிந்து முடிவெடுக்கும் தன்மை வசப மன்னனிடம் காணப்பட்டமைக்கு இது சிறந்த எடுத்துக்காட்டாகும்.

### முக்கிய விடயங்கள்

1. வசப மன்னன் இலம்பகர்ண வம்சத் தின் ஆரம்ப ஆட்சியாளனாவான்.
2. அவன் இந்நாட்டின் விவசாயத் திற்குப் பெரும்பணியாற்றினான். அவனால் 11 பாரிய குளங்கள் அமைக்கப்பட்டன.
3. வல்லிபுர பொற்சாசனம் இம்மன் னனின் ஆட்சிக் காலத்தில் பொறிக்கப்பட்டதாகும்.
4. முதன்முறையாக உள்நாட்டு வருமா னத்தை அதிகரிக்கும் பொருட்டு வரி அறவிடும் முறையை அறிமுகம் செய்தவனும் நாட்டின் நிர்வாகத்தை இலகுவாக்கும் பொருட்டு நிர்வாக அலகுகளை ஏற்படுத்தியவனும் இம் மன்னனாவான்.



### செயற்பாடு - 16

வசப மன்னன் தொடர்பான பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.

1. வசப மன்னன் எந்த அரச வம் சத்தைச் சேர்ந்தவன்?
2. நிர்வாகத்தை இலகுவாக்கும் பொருட்டு வசப மன்னனால் மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கை ஒன்றினை எழுதுக.
3. வசப மன்னனால் பொருளாதாரத் திற்கு ஆற்றப்பட்ட பணிகள் இரண்டினை எழுதுக.
4. வசப மன்னனின் காலத்தில் எழுதப்பட்ட பொற்சாசனம் எப் பெயரால் அழைக்கப்படுகிறது?

## 5.6 மகாசேன மன்னன்

எமது நாட்டை ஆட்சி செய்த சிறந்த மன்னர்களுள் மகாசேனனும் ஒருவனாவான். இவனது தந்தை பெயர் கோதாபயன் ஆவான். மகாசேனனுக்கு ஜெட்டதீசன் என்ற சகோதரன் இருந்தான். மகாசேனனின் தாய் பற்றி பழைய வரலாற்று நூல்களில் எதுவும் குறிப்பிடப் படவில்லை.

விவசாய மேம்பாட்டிற்காக இம் மன்னன் மகத்தான சேவை ஆற்றினான். அவன் 16 குளங்களையும், பிரதான கால்வாய் ஒன்றையும் அமைத்தான். அவனால் அமைக்கப்பட்ட சில குளங்கள் மிகப் பெரிய நீர்ப்பாசனத் திட்டங்களாகும். இதில் மின்னேரியவாவி முக்கிய இடத்தைப் பெறுகின்றது. இக்குளத்தின் அணைக்கட்டு 1 1/4 மைல் நீளமுடையது. இது 4670 ஏக்கர் பரப்பளவுடையது. இது முன்னர் மினிஹிர வாவி என அழைக்கப்பட்டது. இம்மன்னனால் கட்டப்பட்ட வல்லுரவாவி எனப்பட்ட குளம் இன்று ஹுருளுவாவி எனப்படுகிறது. மிகிந்தலையில் உள்ள கணதரா வாவியும் மகாசேனனால் அமைக்கப்பட்டதாகும். அது முன்னர் கானுவாவி எனப்பட்டது.



உரு 5.9 மகாசேன மன்னன் அநுராதபுர ஜேத்தவன தூபத்தை நிர்மாணித்தான்.

மகாசேன மன்னன் விகாரைகள் அமைக்கவும் நடவடிக்கை மேற்கொண்டான். அநுராத புரத்திலுள்ள ஜேத்தவனராம இவற்றில் முக்கியமானதாகும். மகாசேன மன்னனால் நிறுவப்பட்ட ஜேத்தவன தூபியினுள் புத்தர் பெருமானின் தாது வைக்கப்பட்டுள்ளதாக நம்பப்படுகிறது. மின்னேரிய விகாரை, கோகன்ன விகாரை, ஏகாபில்ல விகாரை, தாசென் கல விகாரை ஆகியவை இவனால் கட்டப்பட்டனவாகும். இவை தவிர பல இடங்களில் இருந்த விகாரைகளையும் இவன் புனர்நிர்மாணம் செய்தான். புத்த பிக்குகளுக்குக் காவியுடை வழங்கினான். இம் மன்னன் 27 ஆண்டுகள் இலங்கையை ஆட்சி செய்தான்.



ஜேத்தவனராம தூபம் மகாசேன மன்னனால் நிறுவப்பட்டது.மூலாதாரங்களில் குறிப்பிடப்பட்டுள்ளதற்கு அமைய இது கட்டி முடிக்கப்பட்டதும் 400 அடி உயரமுடையதாக இருந்தது அதன் தாதுகர்ப்பத்தின் அடிப்பகுதியின் விட்டம் 370 அடியாகும். பழங்காலத்தில் இலங்கையில் நிர்மாணிக்கப்பட்ட விசாலமான தூபியாக இது இருந்ததுடன் உலகிலே அக்காலத்தில் இருந்த விசாலமான செங்கல் தூபியாகவும் விளங்கியது. புத்தபெருமானின் இடுப்புப்பட்டி இதில் தாதுவாக வைக்கப்பட்டுள்ளதாக மூலாதாரங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. அபயகிரி விகாரையைப் போன்று விசாலமான ஆராமைக் கட்டடங்கள் ஜேத்தவனராமவிலும் இருந்தன.

மகாசேனன் நாட்டு மக்களின் நன் மதிப்பைப் பெற்றிருந்தான். மக்களின் நலன் கருதிப் பல பணிகளை செய்தமையே இதற்கான காரணமாகும். பல பாரிய குளங்களை அமைத்ததால் இவனை கடவுளைப் போல் மக்கள் போற்றினர். 'மின்னேரித் தெய்வம்' என்று இன்றும் இவன் போற்றப்படுகின்றான். இந்த மன்னனின் பொருட்டு அமைக்கப்பட்ட கோயில் பொலன்னறுவைப் பிரதேசத்தில் உள்ளது.

தனது நாட்டிற்காகவும், மக்களுக்காகவும் கடினமாக உழைத்ததால் மகாசேனன் கடவுளைப்போன்று மதிக்கப்படுகின்றமை உங்களுக்கு சிறந்த முன்மாதிரியாகும். நமது நாட்டில் வாழ்ந்த இந்த மன்னனின் செயற்பாடுகளைப் பார்த்து நாம் நாட்டிற்கு எவ்வாறு நற்பணியாற்றுவது என்பது பற்றி நீங்கள் சிந்திக்க வேண்டும். அப்போதுதான் வரலாற்றிலிருந்து முக்கிய பாடமொன்றை உங்களால் கற்றுக்கொள்ள முடியும்.

**முக்கிய விடயங்கள்**

1. மகாசேன மன்னன் இந்நாட்டின் விவசாயத்திற்கும், நீர்ப்பாசனத் திற்கும் மகத்தான பணியாற்றிய ஆட்சியாளனாவான்.

2. மின்னேரியாக் குளம் இவனால் அமைக்கப்பட்டது. அதன் குளக்கட்டு 1 1/4 மைல் நீள முடையது. முற்காலத்தில் அது மினிஹிரக்குளம் என அழைக்கப் பட்டது.

3. அநுராதபுரத்தில் ஜேத்தவனராம தூபியை நிறுவியது மகாசேன மன்னனாவான், அது முற்காலத் தில் ஆசியாவில் கட்டப்பட்ட மிக உயரமான செங்கல் கட்டடமாகும்.

4. மகாசேன மன்னன் இன்றும் 'மின்னேரித் தெய்வம்' எனப் போற்றப்படுகின்றான்



**செயற்பாடு - 17**

ஆசிரியரின் அறிவுரையுடன் மகா சேன மன்னன் தொடர்பான விபரங் கள் அடங்கிய பக்கப்புரட்டி (Flip Chart) ஒன்றைத் தயாரிக்குக.

## 5.7 தாதுசேன மன்னன்

மன்னன் தாதுசேனனின் தந்தை தாதாநாம என்பவனாவான். தாதுசேனனுக்கு காசியப்பன், முகலன் என்ற இரு மகன் மாரும், ஒரு மகளும் இருந்தனர். அவனுக்கு சலதிஸ்போ என்ற இளைய சகோதரன் ஒருவனும் இருந்தான். தாதுசேனன் அரசனாவதற்கு முன்னர் தென்னிந்தியாவிலிருந்து வந்த பண்டுபாரிந்த, குட்டபாரிந்த போன்ற அறுவர் அனுராதபுரத்தைக் கைப்பற்றி அங்கு ஆட்சி செய்தனர். இவர்களுள் குட்டபாரிந்த, பண்டுபாரிந்த போன்ற ஆட்சியாளர்கள் பௌத்த விகாரை புனர்நிர்மாண அபிவிருத்தி பணிகள் தொடர்பில் சேவையாற்றியுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். தாதுசேனன் இவர்களிடமிருந்து நாட்டை விடுவித்தான். தாதுசேனன் மௌரிய வம்சத்தைச் சேர்ந்தவன்.

இம் மன்னன் விவசாயத்தின் பொருட்டு மேற்கொண்ட பணிகளே அவன் நாட்டிற்கு ஆற்றிய மகத்தான பணியாகக் கருதப்படுகிறது. 18 பாரிய குளங்களும், 18 சிறிய குளங்களும் இம் மன்னனால் நிர்மாணிக்கப்பட்டதாக வரலாற்று நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. இவைகளில் அநுராதபுர மக்கள் இன்றும் பயன் அடையும் குளமாகக் கலாவாவி விளங்குகிறது. கலாவாவியிலிருந்து அநுராதபுரத்திலுள்ள திஸாவாவி வரை செல்லும் யோத கால்வாய் இம் மன்னனால் நிர்மாணிக்கப்பட்டதாகும். அதன் நீளம் 54 மைலாகும். இதன் சாய்வு ஒரு மைலுக்கு 6 அங்குலம் மட்டுமேயாகும்.இது ஜயகங்கை எனவும் அழைக்கப்படுகிறது.



உரு 5.10 தாதுசேன மன்னனின் நிர்மாணப்பணிகள்

தாதுசேனன் பௌத்த சமய மேம்பாட்டிற் காகப் பாரிய பணியாற்றினான். விகாரை களை அமைத்ததுடன், சீர்குலைந் திருந்த விகாரைகளைப் புனர்நிர்மாணம் செய்தான். அவனால் 18 விகாரைகள் அமைக்கப்பட்டதாக மகாவம்சத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. பிக்குகளுக்குப் பல வழிகளிலும் உதவ இம்மன்னன் நட வடிக்கை எடுத்தான். பிக்குமாரின் தான சாலையான அநுராதபுர மகாபாலி தானசா லையைப் புனர்நிர்மாணம் செய்வதற்கான நடவடிக்கைகளை மேற்கொண்டான்.

தாதுசேனன் 18 ஆண்டுகள் இந்நாட்டை ஆட்சி செய்தான். இம்மன்னனுக்கு காசியப்பன், முகலான் எனும் மகன்மார் இருவரும் ஒரு புத்திரியும் இருந்தனர். இம்மன்னன் அக்காலத்தில் விவசாயத்தில் ஈடுபட்டிருந்த மக்களுக்கென குளங்கள் அமைத்துக் கொடுத்தான். பிக்குமாரின் நன்மை கருதியும் பல நடவடிக்கைகளை மேற்கொண்டான். இவைகள் உங்கள் எதிர்கால வாழ்வை சிறப்பாக அமைக்க உதவியாக அமையும்.

**முக்கிய விடயங்கள்**

1. தாதுசேன மன்னன் மௌரிய வம்சத்தைச் சேர்ந்தவன்.
2. கலாவாவி, யோத கால்வாய் என்பன இவனது காலத்தில் அமைக்கப்பட்டவையாகும். தாதுசேனன் 18 பாரிய குளங்க ளையும், 18 சிறிய குளங்களையும் அமைத்தான்.
3. இவன் புத்த சமய மேம்பாட்டின் பொருட்டு மகத்தான பணியாற்றி னான்.



**செயற்பாடு - 18**

1. தாதுசேன மன்னனால் மேற் கொள்ளப்பட்ட நீர்ப்பாசன பணிகளைப் பெயரிடுக.